க்ரைம் நாவல்



இந்தியாவிலேயே அதிகமாக விற்பனையாகும் தமிழ் மாத நாவல்

# ரத்தமின்றி ஒரு யுத்தம்

ebook design by - TAMIL NESAN

## ராஜேஷ்குமார்

# ரத்தமின்றி ஒரு யுத்தம்

**ராஜேஷ்குமார்**

## 1

ஐந்து நட்சத்திர ஹோட்டலான 'செவன் கலர் ஸின் ஐந்தாவது மாடியின் கான்ப்ரன்ஸ் ஹாலில் - அந்த அறிவு ஜீவிகளின் 'செமினார்' நடந்து கொண்டிருந்தது. மொத்தமே நூத்தி முப்பத்தியோர் பேர்தான். அதில் நூத்தி இருபது பேர்க்கு முன் மண்டையிலும் பின் மண்டையிலும் முடி கொட்டிப்போய் பாலீஷ் போட்ட ஆப்பிள் மாதிரி வழுக்கைகள் ப்ளோர ஸண்ட் விளக்கு வெளிச்சத்தில் மினுமினுத்தது. கண்ணை உறுத்தாத நிறங்களில் சூட் அணிந்து - மூக்குக் கண்ணாடி முகங்களோடு தெரிந்தார்கள். எல் லோருடைய பார்வைப் புள்ளிகளும் மேடையின்

மையத்தில் போய் குவிந்திருக்க - அங்கே உருண்டை மைக் முன்பாய் நின்றபடி - மெலிதான சிக்கல் இல் லாத ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருந்தார் சயின் டிஸ்ட் வித்யபிரகாஷ்.

"உலகத்திலேயே இரண்டாவது பெரிய நாடான நம் இந்தியாவுக்கு வானியல் அறிவும் - கம்ப்யூட்டர் அறிவும் போதாது. விஞ்ஞான அறிவுப் பிச்சைக் கேட்டு வெளிநாடுகளிடம் நாம் இன்றைக்கும் கையேந்திக் கொண்டிருக்கிறோம். இந்தியாவின் புதிய விண்கோளான ஐ.ஆர்.எஸ். 1 - பி டெலி ராக்கெட் சோவியத் யூனியனில் உள்ள பைகானூர் ராக்கெட் ஏவுதளத்தில் இருந்து வோஸ்டாக் ராக்கெட் மூலம் விண்ணுக்கு ஏவப்பட்டது. சோவியத் ராக் கெட் மூலம் ஏவப்படும் ஐந்தாவது இந்திய ராக்கெட் இது. இப்படி விஞ்ஞான அறிவை வாடகைக்கு வாங் கியே இன்னும் எத்தனை காலத்துக்கு நாம் காலம் தள்ளப்போகிறோம். இந்த ஐ.ஆர்.எஸ் 1 - பி யில் நாம் பெருமைபட்டுக் கொள்ளக்கூடிய ஒரே விஷ யம் அந்த விண்கோளின் உள்ளே இருக்கும் எலக்ட் ரானிக் சங்கதிகள் நம் நாட்டில் தயாரான பொருட்க ளைக் கொண்டு தயாரிக்கப்பட்டவை. விண்கோளின் மொத்த எடை 980 கிலோ. அதில் 700 வாட் மின்சார உற்பத்தித் திறன் கொண்ட ஸோலார் விங்க்ஸ் எனப் படும் சூரிய சிறகுகள் உள்ளன. ஒவ்வொரு சூரிய சிறகிலும் மூன்று முக்கியமான காமிராக்கள் உள் ளன. இவைகள் இரவிலும் பகலிலும் இயற்கையின் எந்த சூழ்நிலையிலும் படம் பிடிக்கும் திறன் கொண் டவை. படங்கள் ஹைதராபாத் அருகிலுள்ள ஷாத் நகர்(ISRO) இஸ்ரோ தரை நிலையத்துக்கு இந்த விண் வெளிக் கோளிலிருந்து அனுப்பப்படும். பூமியிலி ருந்து 900 கிலோமீட்டர் உயரத்தில் பறந்தாலும் அதி அற்புதமான படங்களை எடுக்க வல்லது. IRS-1-B விண்கலம் நம் நாட்டின் நீர்வளம், மண்வளம், தாது வளங்கள், பயிர்விளைச்சல், வெள்ளச் சேதம், ராட் சத அனல் மின் நிலையங்களைச் சுற்றியுள்ள புறச்சூ மல் - காடுகளில் உள்ள மிருகங்களின் இயக்கங்கள், மீன்வளம், நகரங்களின் அடர்த்தி - அதன் வளர்ச்சி பற்றி - IRS - 1 - B படங்களையும் தகவல்களையும்

அனுப்பும் இதை உருவாக்க ஆன செலவு பத்
னைந்து கோடி. ஆனால்... இந்த விண்கலத்தை ரஷ்
யாவுக்கு கொண்டுபோய் - விண்ணில் செலுத்த -
இருபதுகோடி ரூபாயை செலவு செய்தோம். ஆடு
கால் பணம் சுமைகூலி முக்கால் பணம் என்கிற பழ
மொழிக்கு உதாரணமாய் - நம் இந்திய அரசு செயல்
பட்டு வருகிறது...''

கடைசி நாற்காலி வரிசையில் - மூன்றாவதாய் உட்கார்ந்த சுபலா தன் அருகில் இருந்த டாக்டர் ரகுநாத்திடம் திரும்பினாள்.

''அங்கிள்...''

''என்னம்மா...?''

''கிழம் அறுக்குது...''

''அப்படியெல்லாம் விமர்சனங்களை சொல்லக் கூடாது. வித்யப் பிரகாஷ் ஒரு க்ரேட் சயண்டிஸ்ட்... சுவாரஸ்யமா பேசறதுக்கு அவரு ஒண்ணும் அரசியல் வாதி இல்லையே...

''அவர் அரசியல்வாதி மாதிரி பேச வேண்டாம்... நம்ம மெடிகல் சயின்ஸைப் பத்தி பேசலாமே...? ஏதோ ராக்கெட்டைப் பத்தி பேசிட்டிருக்கார்...''

''எல்லா விஷயத்தையும் டச் பண்றவார். நெளியாமே கொட்டாவி விடாமே அவர் ஸ்பீச்சை கவனி...''

அழகான அந்த இருபத்தி மூணு வயது சுபலா தன் நீண்ட நெயில்பாலீஷ் பூச்சுப் பொலிவுடன் மினுமினுத்த விரல்களால் நெற்றியைப் பிடித்துக் கொண்டாள். ''வசமா மாட்டிக்கிட்டேன்... சயண்டிஸ்ட் கிழத்தோட உற்சாகத்தைப் பார்த்தா இன்னும் ஒரு மணி நேரத்துக்கு அறுக்கும் போலிருக்கே...?''

''என்ன முணுமுணுப்பு...?''

''ஒண்ணுமில்லே அங்கிள்...'' சொல்லிவிட்டு மேடையை நோக்கி பார்வையைக் கொண்டு போனாள் சுபலா.

சுபலாவைத் தவிர - எல்லோரும் கை தட்டினார்கள்.

வித்யபிரகாஷ் தொடர்ந்தார். "இதற்கு காரணம் என்ன...? அங்கே விஞ்ஞானம் வளர்ந்திருக்கிறது. புதிது புதிதாய் எதை எதையோ கண்டுபிடிக்கிறார்கள். நம் நாட்டில் உள்ள அரசியல் தலைவர்கள், பிரதமர், ஜனாதிபதி உட்பட எதற்காக அமெரிக்கா போகிறார்கள் தெரியுமா...? அவர்கள் கண்டுபிடித்து வைத்துள்ள புதுமைகளைப் பார்த்து - ஆச்சர்யப்படத்தான்..."

செமினார் ஹாலில் மெலிதாய் சிரிப்பு கிளம்பி அடங்கியது.

வித்யபிரகாஷ் தொடர்ந்தார்.

"அங்கே விஞ்ஞானம் வெற்றி பெறுவதற்கு காரணம் அந்த நாட்டு அரசு விஞ்ஞானிகளை மதித்து செயல்படுவதுதான். எந்த ஒரு அமெரிக்க விஞ்ஞானியும் அந்த நாட்டு ஜனாதிபதியை சுலபமாய் போய் பார்க்க முடியும். ஆனால், இந்தியாவில் அந்த நிலை இல்லை. பெட்ரோல் தட்டுப்பாட்டை நீக்கவும், அந்நிய செலாவணியை மிச்சப்படுத்தவும் - பெட்ரோலுக்கு மாற்று எரிபொருள்களாக 'காஸோ ஹால்' -என்னும் திரவ எரிபொருளைக் கண்டுபிடித்து -அதைப் பற்றிய லிட்டரேச்சர், ப்ராக்ராஸ் கார்ட்களை பிரதமரின் பார்வைக்கும், ஜனாதிபதியின் பார்வைக்கும் நான் அனுப்பி வைத்தேன். ஆனால், இது வரைக்கும் அவர்களிடமிருந்து எந்தவிதமான பதிலும் இல்லை. அவைகளையெல்லாம் படித்துப் பார்க்க அவர்களுக்கு நேரம் எங்கே இருக்கிறது! கட்சி மாநாடுகளில் கலந்து கொள்ளவும், வெளிநாடுகளுக்குபோய் ஆபரேஷன் செய்து கொள்ளவும் - ஓய்வாய் இருக்கும்போது தனக்கு வேண்டியவர்களுக்கு மெடல் குத்தி - விருதுகளைத் தரவும் - நேரம் சரியாய் இருக்கிறது... எந்த நாட்டில் விஞ்ஞானிகள் மதிக்கப்படவில்லையோ... அந்த நாடு பொருளாதாரத்தில் உயராது... என் கைவசம் ஏராளமான திட்டங்கள், ஆய்வுகள் இருக்கின்றன. அந்த திட்டங்களை, ஆய்வுகளை நடைமுறைக்கு கொண்டுவர அரசு எனக்கு மான்யம்

தந்தால் போதும். ஒவ்வொன்றையும் வெற்றிகரமாக செய்து காட்டுவேன். கம்ப்யூட்டர் வரையில் என்னால் அற்புதங்களை நிகழ்த்தி காட்ட முடியும்.''

கைத்தட்டல் எழுந்தது.

சுபலா முனகினாள்.

''கிழம் சரியான தற்பெருமை கேஸ்...''

டாக்டர் ரகுநாத் புன்னகையோடு அவளை ஏறிட்டார்.

''யூ... ஆர் ராங்க்... சுபலா...! அது தற்பெருமை இல்லை... தன்னம்பிக்கை... வித்யப்ரகாஷைப் பத்தி எனக்குத் தெரியும். ஹி ஈஸ் ஏ... ஜீனியஸ்..''

''எனக்கு பார்த்தா அப்படி தோணலை...''

''அவரோட அருமை உன்னை மாதிரியான இளசுகளுக்கு புரியாது. அவரோட மூளையில் இருக்கிற ஒவ்வொரு செல்லுக்கும்... லட்ச ரூபாய் தரலாம்...''

''நீங்க சொல்ற மாதிரி குடுத்தா 'உலக பாங்க்'கே திவாலாயிடும்... அங்கிள்...''

''வித்யப்ரகாஷ் இன்னும் ரெண்டுவார காலத்துக்கு நம்ம ஹாஸ்பிடல் கெஸ்ட் ஹவுஸ்லதான் தங்கப் போறார்... அந்த சந்தர்ப்பத்தில் [illegible] சுக்குவே...''

கைத்தட்டல் பலமாய் எழ - சுபலா மேடையை நிமிர்ந்து பார்த்தாள். வித்யப்ரகாஷ் பேச்சை முடித்துக் கொண்டு மேடையினின்றும் இறங்கிக் கொண்டிருந்தார்.

எல்லோரும் அவரை சூழ்ந்தார்கள்.

''உங்க ஸ்பீச் சிம்ப்ளி சுபர்ப்...'''

''நீங்க சொன்ன கருத்துக்களில் எதுவுமே தப்பில்லை... மிஸ்டர் வித்யப்ரகாஷ். நாளைக்கே ஒரு 'ப்ரஸ்மீட்' ஏற்பாடு பண்ண - பேட்டி குடுங்களேன்...''

''ஷ்யூர்... ஷ்யூர்...''

டாக்டர் ரகுநாத்தும், சுபலாவும் கும்பலில் ஊடுருவி அவரை நெருங்கினார்கள். ரகுநாத் வித்யப்ரகாஷ்

கையைப் பற்றினார்.

"இன்னிக்கு உங்க பேச்சில் 110 டிகிரி உஷ்ணம்... இந்த ஹால்ல இருக்கிற ஏ.ஸி.யை என்னால ஃபில் பண்ண முடியலை... மிஸ்டர் வித்யப்ரகாஷ்..."

வித்யப்ரகாஷ் வரிசையான பற்களைக் காட்டி சிரித்தார். "அது உஷ்ணமில்லை. என்னோட மன ஆதங்கம்... டாக்டர்! பை... த... பை... யார் அந்தப் பொண்ணு...?"

"முகஜாடையை வெச்சு சொல்லுங்க பார்ப்போம்...?"

வித்யப்ரகாஷ் சில விநாடிகள் சுபலாவின் முகத்தை பார்த்துவிட்டு தலையசைத்தார். "பிடிபடலையே...?"

"என்னோட நர்சிங் ஹோமில் பார்ட்னராய் இருந்தாரே... டாக்டர் செரியன்...?"

"போன வருஷம் ஹார்ட் அட்டாக்கில் இறந்து போனாரே...?"

"அவரேதான்..."

"அவரோட...?"

"டாட்டர்... பேரு சுபலா..."

வித்யப்ரகாஷ் புன்னகைத்தார். "ஸ்வீட் நேம்...! நீ என்னம்மா பண்ணிட்டிருக்கே...?"

"இன்னும் ரெண்டு மாசத்துல ஹவுஸ் சர்ஜன் கோர்ஸை முடிச்சுட்டா... நானும் ஒரு டாக்டர்தான்... அங்கிள் நர்சிங் ஹோமிலேயே பார்ட்னர் போஸ்ட் எனக்கு."

"குட்... குட்..."

"கார்க்கு போலாமா வித்யப்ரகாஷ்..."

"ம்..."

-டாக்டர் ரகுநாத்தின் காரில் ஏறினார் வித்யப்ரகாஷ். சுபலா ட்ரைவிங் சீட்டுக்கு வந்தாள்.

காரை விரட்டினாள். போக்குவரத்து குறைந்த சாலைக்கு வந்ததும் வித்யப்ரகாஷ் கேட்டார்.

''டாக்டர்! உங்க ஹாஸ்பிடல் எப்படி 'ரன்' ஆயிட்டிருக்கு?''

''வெரி ஃபைன்,... ஊர்ல கைராசி டாக்டர்ங்கிற பேர் எஸ்டா ஃபிளிஷ் ஆயிடுச்சு... பேஷண்ட்ஸ் கூட்டத்துக்கு கேட்பானேன்... அடுத்த மாசத்திலிருந்து சுபலாவும் ஒரு பரிபூர்ண டாக்டர்... லேடி ஃபேஷண்ட்ஸ் கூட்டம் கொஞ்சம் அதிகமாவே வரும்...''

''இப்ப ஹாஸ்பிடல் எத்தனை ஃப்ளோர்...?''

''ரெண்டு ஃப்ளோர்தான்... அதைக் கட்டி முடிக்கவே நானும் சுபலாவோட அப்பா டாக்டர் செரியனும் இருபது லட்ச ரூபாய் வரைக்கும் போட்டோம்...''

''பிரசவ கேஸ் மாசத்துக்கு எவ்வளவு வரும்...?''

''இருபதிலிருந்து இருபத்தைந்து கேஸ் வரும்...''

''எல்லாமே நார்மல் டெலிவரிதானா...?''

''லேசா...''

''நான் டெல்லியிலிருந்து மெட்ராஸ் வந்ததுமே... நீங்க என்னைச் சந்திச்சு... உங்க [illegible]பிடல் கெஸ்ட் ஹவுஸில் பதினைஞ்சு நாள் தங்க[illegible] சொன்னப்ப... நான் மறுக்காமே ஏன் தெரியுமா ஒத்துகிட்டேன்...?''

''சொல்லுங்க...''

''நான் புதுசா கண்டுபிடிச்சிருக்கிற 'எம்பிரியோ ப்ரீச்சர்' என்கிற கம்ப்யூட்டரை உங்க ஹாஸ்பிடல்ல வெச்சு சோதனை பண்ணத்தான்...''

காரை ஓட்டிக் கொண்டிருந்த சுபலா ஆர்[illegible] திரும்பினாள். ''எம்பிரியோ ப்ரீச்சரா... [illegible]டின்னா...?''

''மகாபாரதத்தில் அபிமன்யூ தன் த[illegible] வயிற்றில் குழந்தையா இருக்கும்போதே [illegible]களை கேட்டு பிறக்கும்போது வீரமோடு [illegible]னாம்... கேள்விப் பட்டிருக்கியா...?''





"ஆமா..."

"அதைத்தான் நானும் பண்ணப் போறேன்..."

டாக்டர் ரகுநாத் நெற்றியைக் கீறினார். "எனக்கு புரியலை மிஸ்டர் வித்யப்ரகாஷ்..."

புன்னகைத்தார் வித்யப்ரகாஷ். "புரியும்படியா கவே சொல்றேன். தற்சமயம் ஒரு குழந்தை பிறந்தா ரெண்டரை வருஷம் வரைக்கும்.. காலத்தை விரய மாக்கி அதுக்கப்புறம் எல்.கே.ஜி.யில் கொண்டு போய் சேர்த்து A, B, C, D... சொல்லித் தர்றாங்க... குழந்தையும் ரெண்டு வருஷம் கழிச்சுத்தான் பேசவும் செய்யுது... ஆனா நான் கண்டுபிடிச்சிருக்கிற 'எம்ப் ரியோ ப்ரீச்சர்' கம்ப்யூட்டர்... குழந்தை தாயோட கருவில் எட்டுமாத வளர்ச்சி பெற்றிருக்கும்போதே -எல்.கே.ஜி. பாடங்களை சொல்லித்தர ஆரம்பிக் கும்.... அம்மான்னு சொல்ல பழகிக் கொடுக்கும்... தினமும் ஒருமணி நேரம் வீதம் முப்பது நாளைக்கு அந்த கம்ப்யூட்டர் தாயோட வயிற்றில் இருக்கிற கரு வுக்கு க்ளாஸ் எடுக்கும். நர்ஸரி ரைம்ஸ் சொல்லித் தரும்..."

கலபா பிரமித்தாள்.

"மை குட்னஸ்... இது சாத்தியமா ஸார்...?"

"வெகு சாத்தியம்... தாயோட வயிற்றிலிருந்து வெளியே வரும் குழந்தைக்கு இரண்டரை வயது குழந்தைக்குரிய மூளை வளர்ச்சி ஏற்பட்டிருக்கும். பிர சவம் ஆனதுமே அந்தக் குழந்தை அழாது. பக்கத்தில் படுத்திருக்கிற தன் தாயோட கையைத் தொட்டு 'அம் மா'ன்னு கூப்பிடும்..."

டாக்டர் ரகுநாத்தின் முகம் வியர்வையில் இருந் தது.

"மிஸ்டர் வித்யப்ரகாஷ்! ஆர்... யூ... ஜோக்கிங்...

"நோ... நோ.. அந்த எம்ப்ரியோ ப்ரீச்சர் கம்ப் யூட்டரை என் கையோடு கொண்டு வந்திருக்கி றேன்... நீங்க அனுமதி குடுத்தா...ப்பிரசவத்துக்காக உங்க ஹாஸ்பிடலில் 'அட்மிட்' ஆகிற பெண்களிடம் இதை பயன்படுத்தப் போகிறேன்..."

''கிரீச்ச்...''

வேகமாய் போய்க்கொண்டிருந்த கார், சட்டென்று ரோட்டைத் தேய்த்துக்கொண்டு ஓரமாய் நின்றது. அதிர்ச்சியாய் திரும்பினாள் சுபலா.

---

# 2

---

குட்லக் நர்சிங் ஹோம்.

மாலை மணி ஆறு.

நர்சிங்ஹோமின் காம்பௌண்ட் கேட்டுக்குள் அந்த சைக்கிள் ரிக்ஷா நுழைந்து போர்டிகோவில் வந்து நின்றது. ரிக்ஷாவை ஓட்டி வந்த மாரியப்பன் லுங்கியை சரியாய் கட்டிக்கொண்டு கீழே இறங்கினான். ஒடிச்சலான தேகம். அழுக்கு சட்டும் தலையில் துண்டுமாய் தெரிந்தான். ரிக்ஷாவின் பின்சீட்டில் பம்மிய வயிற்றோடு உட்கார்ந்திருந்த தன்னுடைய மனைவி வடிவுக்கரசியைப் பார்த்துக் குரல் கொடுத்தான்.

''மொள்ளமா இறங்கு புள்ளே... ரிக்ஷா கம்பியில வயித்தை இடிச்சுக்கப் போறே...?''

அவன் அவளுடைய தோளைப் பற்றி ஒரு பூ மாதிரி இறக்கினான்.

''ம்... மாடி...''

''மெதுவா... மெதுவா...''

கறுப்பாய் ஆனால் லட்சணமாய் இருந்த வடிவு கீழே இறங்கியதும் நர்ஸிங்ஹோமைப் பார்த்து கன்னத்தில் கை வைத்தாள்.

''பணக்காரங்க வந்து குழந்தைகளை பெத்துக்கிற ஆஸ்பத்திரி மாதிரி தெரியுது மாமாவோவ்...!''

''அதேதான்...''

''பணம் நிறைய கேப்பாங்களே... மாமா...''

''குடுத்துட்டா போவுது...''

''மாமா...நான் சொல்றதைக் கேளு... இதெல்லாம் நமக்கு நம்மளை மாதிரியான ஏழைபாழைகளுக்கு ஏத்த ஆஸ்பத்திரி இல்லை... பேசாமே கார்ப்பரேஷன் ஆஸ்பத்திரிக்கே போயிடுவோம்...''

''வாயை மூடிக்கிட்டு வா புள்ளே... செலவைப் பத்தி நீ ஒண்ணும் கவலைப்படாதே... ராஜாவாட்டம் ஒரு பையனைப் பெத்துகுடு.. அதுபோதும் எனக்கு...''

வடிவுவை கைத்தாங்கலாய் பற்றிக்கொண்டு -ஹாஸ்பிடலின் ரிசப்ஷன் ஹாலுக்குள் நுழைந்தான் மாரியப்பன். கௌண்டரில் இருந்த ஸ்டாஃப் நர்ஸ் அவனைக் கையசைத்து கூப்பிட்டாள்.

''இங்கே வாப்பா...''

போனான்.

''என்ன விஷயம்...?''

''இது என் பொஞ்சாதிங்க... பிரசவத்துக்காக கூட்டிட்டு வந்திருக்கேன். டாக்டரய்யாவை பார்க்கணும்...''

நர்ஸ் மாரியப்பனை அலட்சியமாய் பார்த்தாள்.

''உனக்கு என்ன தொழில்?''

''ரிக்ஷா இழுக்கிறதுதாங்க...''

''இந்த ஹாஸ்பிடல்ல தங்கி பிரசவம் பார்த்துகிட்டா 'பீஸ்' அதிகமா தர வேண்டியிருக்கும்...''

''தெரியும்ங்க...''

''ரெண்டாயிரத்திலிருந்து மூவாயிரம் வரைக்கும் ஆகும்.''

''தெரிஞ்சுதாங்க வந்திருக்கோம்... பணமெல்லாம் ரெடியா இருக்குங்க... இப்பவே வேணும்னாலும் கட்டிடறேங்க... என் சம்சாரத்துக்கு நல்லபடியா பிரசவம் ஆனா போதும்ங்க... கல்யாணமான பத்து வருஷத்துக்கப்புறம்... உண்டாகியிருக்கா...இந்த ஆஸ்பத்திரி டாக்டர் கைராசிக்காரர்ன்னு... எங்க பேட்டையில சொன்னாங்க... அதான் இருந்த ரெண்டு ரிக்

ஷால ஒன்னை வித்து பணத்தை கொண்டு வந்திருக்கேன்...''

''இங்கே பிரசவம் பார்க்கணும்னா... மொதல்ல ஆயிரம் ருபாயை கட்டணும்...''

''கட்டிட்டாப் போச்சு...''

லுங்கியின் இடுப்பு மடிப்பை அவிழ்த்து உள்ளே சுருட்டி வைத்திருந்த நூறுருபாய் நோட்டுக்களை எடுத்து நீவி - ஒவ்வொன்றாய் எண்ணி ஆயிரம் ருபாயை நர்ஸிடம் கொடுத்தான். அவள் வாங்கி லெட்ஜரில் பதிவு செய்துக் கொண்டு A - பிளாக்கை காட்டினாள்.

''அங்கே பனிரெண்டாம் நெம்பர் ரும்... போய் இருங்க... இப்ப வந்துடறேன்...''

''நர்ஸம்மா...! டாக்டர்...?''

''அவர் வெளியே போயிருக்கார்... வந்ததுமே உங்க ருமுக்கு வருவார்''

''நர்ஸம்மா...'' மாரியப்பன் [illegible] குவித்து கும்பிட்டான்.

''என்ன...?''

''என்னோட சம்சாரத்துக்கு... எந்த சிக்கலும் ஏற்படாதபடிக்கு பிரசவம் நல்லபடியா நடந்து முடியணும்...''

நர்ஸ் புன்னகைத்தாள். ''அதைப் பத்தின கவலையே உனக்கு வேண்டாம். டாக்டர் ரகுநாத்தோட கைராசியைப் பத்திதான் ஊர் பூராவும் தெரியுமே...''

''அதைக் கேள்விப்பட்டுத்தான்... எம்புட்டு செலவானாலும் பரவாயில்லைன்னு... பிரசவம் பார்க்க... இங்கே கூட்டியாந்திருக்கேன்...''

அவன் பேசிக்கொண்டிருக்கும்போதே -

ரிசப்ஷன் கௌண்டரின் மேஜையிலிருந்த டெலிபோன் முணுமுணுத்து கூப்பிட்டது. அந்த நர்ஸ் ரிஸீவரை எடுத்தாள்.

''ஹலோ...''

''டாக்டர் ரகுநாத் இருக்காரா...?''

"நீங்க யார் பேசறது...?"

"விஸ்டம் பத்திரிகையிலிருந்து ரிப்போர்ட்டர் பேசறேன். சமீபத்தில் டாக்டர் ரகுநாத் பண்ணின ஒரு ஆப்ரேஷனைப் பத்தி பேட்டி எடுக்கணும். அவரை ஏற்கெனவே காண்டாக்ட் பண்ணினப்போ... ஒரு வாரத்துல டேட் தர்றேன்னு சொன்னார்..."

"அவர் இப்ப ஹாஸ்பிடல்ல இல்லையே..."

"எங்கே போயிருக்கார்?"

"சயண்டிஸ்ட் வித்யப்ரகாஷ் கலந்துக்கிற செமி னார்க்கு போயிருக்கார். அரை மணிநேரம் கழிச்சு போன் பண்ணுங்க. இருப்பார்..."

"தேங்க்யூ..."

ரிசீவரை வைத்த நர்ஸ் மாரியப்பனும் வடிவுக்கர சியும் இன்னமும் நின்று கொண்டிருப்பதை பார்த்த தும் சொன்னாள்.

"ஏ... ப்ளாக்... பனிரெண்டாம் நெம்பர் ரூமுக்கு போங்க... டாக்டர் ஆஸ்பத்திரிக்கு வந்ததும் உங்க ரூமுக்கு வருவார்..."

மாரியப்பன் தலையாட்டிவிட்டு கைத்தாங்க லாய் மனைவியைக் கூட்டிக்கொண்டு - ஏ. பிளாக்கை நோக்கிச் சென்றான்.

---

# 3

---

கார் க்றீச்சிட்டு ரோட்டோரமாய் ஒதுங்கி நின்ற தும் - அதிர்ச்சியாய் திரும்பிய சுபலாவைப் பார்த்து புன்னகைத்தார் வித்யப்ரகாஷ்.

"ஏம்மா காரை நிறுத்திட்டே...?"

"ஸார்... என்னால நம்ப முடியலை..."

"எதை...?"

''குழந்தை பிறந்ததுமே... அது பெத்தவளை அம்மான்னு கூப்பிடுமா...?''

''கூப்பிடும்...''

''எப்படி ஸார்...?''

''எம்பிரியோ பிரிச்சரோட வேலையே அது தானே... அந்த பயலாஜிகல் கம்ப்யூட்டர் கேன் டு வொண்டர்ஸ்...''

''ஸார்! அந்த கம்ப்யூட்டரை நான் உடனடியா பார்க்கணும்.''

''தாராளமா பார்க்கலாம்'' புன்னகைத்து தலையாட்டிய வித்யப்ரகாஷ் டாக்டரிடம் திரும்பினார். ''என்ன ரகுநாத்... மௌனமாயிட்டீங்க...?''

''மிஸ்டர் வித்யப்ரகாஷ்...! எனக்கு சில சந்தேகங்கள்...''

''கேளுங்க...''

''எம்பிரியோ ப்ரீச்சர் என்கிற பயலாஜிகல் கம்ப்யூட்டரை நிர்மாணம் பண்ணியது யார்...?''

''நான்தான்...''

''எந்த பேஸிஸ்ல நிர்மாணம் பண்ணினீங்க..?''

''யூ... மீன்... பர்ப்பஸ் அண்ட் மோட்டிவ்...?''

''ஆமாம்...''

''இனிமேல் பிறக்கக் கூடிய குழந்தைகளெல்லாம் நிறைய புத்திசாலித்தனத்தோடு அதிகபட்ச ஐ.க்யூ பர்ஸண்டேஜோடு'பிறக்கணும்...''

''இந்த நோக்கத்துக்காகத்தான் எம்பிரியோ ப்ரீச்சரை கண்டுபிடிச்சீங்க...''

''ஆமா..''

''அந்த கம்ப்யூட்டரை இதுவரையிலும் ஒருதடவையாவது... டெஸ்ட் பண்ணி பார்த்திருக்கீங்களா...?''

''இல்லை...! டெஸ்ட் பண்ணி பார்க்கிற எண்ணத்தோடுதான் அந்த கம்ப்யூட்டரை எடுத்துக்கிட்டு மெட்ராஸ் வந்திருக்கேன். நீங்க பர்மிஷன் கொடுத்தா உங்க ஹாஸ்பிடலிலேயே... அட்மிட் ஆயிருக்கிற

கர்ப்பிணி பெண்கள்கிட்டே பரீட்சித்து பார்க்க லாம்...''

''ஸாரி... மிஸ்டர் வித்யப்ரகாஷ்...''

''எதுக்கு ஸாரி...?''

''என்னோட ஹாஸ்பிடல்ல இந்த பரிசோதனை யெல்லாம் வேண்டாம்...''

''ஏன்...?''

''இது விஷப்பரீட்சை... உங்க விஞ்ஞான சங்க தியை எல்லாம் பிறக்கப் போகிற சிசுமேல பிரயோ கிக்க வேண்டாம்...''

வித்யப்ரகாஷ் சிரித்தார். ''டாக்டர்! உங்களுக்கு என்னாச்சு? ஏன் ஒரு கிராமத்து வைத்தியர் மாதிரி பேசறீங்க... இன்னிக்கு எல்லாத்துறையிலும் கம்ப் யூட்டர் வந்தாச்சு... அமெரிக்க சயண்டிஸ்ட் ஒவ் வொருத்தனும் ஒரு கடவுள் மாதிரி அற்புதங்கள் செய் யறான்... நாம இங்கே ஒவ்வொரு காரியத்துக்கும் ராகுகாலம் பார்த்திட்டிருக்கோம்... எம்ப்ரியோ ப்ரீச் சரை நிர்மாணம் பண்ண நான் எவ்வளவு கஷ்டப்பட் டேன்னு உங்களுக்குத் தெரியுமா...?''

''மிஸ்டர் வித்யப்ரகாஷ்! உங்களுடைய முயற்சி யைப்பத்தி நான் குறை சொல்லலை... ஆனா நோக் கம் சரியில்லை... குழந்தைகள் தானா வளரணும்... இயற்கைக்கு மாறா எதையும் திணிக்கக் கூடாது...''

''இந்த சோதனை மட்டும் வெற்றியடைஞ்சா... உலக விஞ்ஞானம் இந்திய நாட்டுக்கு முன்னாடி மண்டி போட்டு உட்காரும்...''

''அங்கிள்! ப்ளீஸ் அங்கிள்! இந்த எம்பிரியோ ப்ரீச்சர் சோதனையை நம்ம ஹாஸ்பிடலிலேயே... நடத்த நீங்க அலவ் பண்ணுங்க... திஸ் ஈஸ் ஒன்லி எக்ஸ்பரிமெண்டல்''

ரகுநாத் தலையாட்டினார்.

''எனக்கென்னமோ... இது விபரீதமா படுது...''

வித்யப்ரகாஷ் ரகுநாத்தின் தோளைத் தட்டினார். ''ஒரு விபரீதமும் இல்லை டாக்டர்... எம்ப்ரியோ ப்ரீச்

சர் ஒரு ஹார்ட்லெஸ் கம்ப்யூட்டர்... ஒரு கர்ப்பிணி பெண்ணுக்கு இதைக்கொண்டு டெஸ்ட் பண்ணிப் பார்ப்போம்... ரிசல்ட் கிடைக்கலைன்னா விட்டுடு வோம்... அதுக்கப்புறம் ஐ டோண்ட் கம்பெல் யூ..."

ரகுநாத் முன்நெற்றியை பிடித்துக்கொண்டு - சுபலா சிணுங்கினாள். "சரின்னு சொல்லுங்க அங்கிள்...! மிஸ்டர் வித்யப்ரகாஷ் க்ரேட் சயண்டிஸ்டுன்னு சொன்னீங்க... அவர் நிர்மாணம் பண்ணின கம்ப்யூட்டர் தப்பு பண்ணுமா...?"

ரகுநாத் தீவிரமாய் யோசிக்க ஆரம்பித்தார்.

# 4

ஹாஸ்பிடல். A பிளாக்.

12-ம் நம்பர் அறை.

வடிவுக்கரசி பம்மிய வயிற்றோடு - கட்டிலில் படுத்திருக்க தலைமாட்டில் நின்றிருந்தான் மாரியப்பன்.

"வலி... இப்ப எப்படியிருக்கு புள்ளே...?"

"மாமோவ்..."

"ம்..."

ஆஸ்பத்திரிக்கு வந்ததுமே.. வலி காணாமே போயிடுச்சு..."

வயித்துக்குள்ளே இருக்கிற பய... கள்ளப்பயலா இருப்பான் போலிருக்கு..." மாரியப்பன் சந்தோஷமாய் சிரித்தான்.

"மாமோவ்..."

"என்ன புள்ள...?"

"வவுறு பசிக்குது..."

''பசிக்குதா...? எதிர்த்தாப்புல இருக்கிற ஹோட்டலுக்கு போய் இட்லி வாங்கியாரட்டுமா...?''

''எனக்கு இட்லி வேணாம்...''

''பொறவு...?''

''வாய்க்கு உறைப்பா... வக்கனையா சாப்பிடணும்போல் இருக்கு. மிலிடெரி கடையில போய் கால் ப்ளேட்டு பிரியாணி வாங்கியாறியா...?''

மாரியப்பன் சிரித்துக்கொண்டே - அவளுடைய வயிற்றின் மேல் மெல்ல தலையை வைத்து -

''ஏண்டா... கள்ளப்பயலே... உனக்கு உறைப்பா பிரியாணியா வேணும்...? வாங்கியாறேன்... கால்ப்ளேட் என்ன... ஃபுல் பிளேட்டே வாங்கிட்டு வர்றேன்... அம்மாவை உதைக்காமே... இரு...''

- கிளம்பினான்.

---

# 5

---

ஒரு நிமிஷ யோசனைகளுக்குப்பின் - டாக்டர் ரகுநாத் நிமிர்ந்தார். வித்யப்ரகாஷை ஏறிட்டபடி சொன்னார். ''ஐ... அக்ரி வித் யூ...நீங்க சோதனையை மேற்கொள்ளலாம்...''

''தேங்க்யூ...''

''பட்... ஒன் கண்டிஷன்...''

''என்ன...?''

''என்னோட ஹாஸ்பிடலில் இருக்கிற ஒரேயொரு பேஷண்ட்டை மட்டும் உங்களுடைய எம்ப்ரியோ ப்ரீச்சர் சோதனைக்கு உட்படுத்தலாம்... அந்த சோதனை தோல்வியில் முடிஞ்சா... மேற்கொண்டு சோதனையை... நடத்தக்கூடாது...''

வித்யப்ரகாஷ் சிரித்தார்.

"ஐ... அக்செப்ட்..."

"ரகுநாத்! தற்சமயம் ஹாஸ்பிடல்ல... எத்தனை பேர் டெலிவரிக்காக அட்மிட் ஆயிருக்காங்க...?"

"பத்துபேர் வரைக்கும் இருக்கலாம்..."

"அந்த பத்து பேர்ல நீங்களே ஒருத்தரை செலக்ட் பண்ணுங்க... பட் அந்த பெண்ணுக்கு நைன் மன்த்ஸ் கம்ப்ளீட் ஆயிருக்கணும்..."

ரகுநாத் தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே - ஹாஸபிடல் போர்டிகோவில் கார் பொதிந்து நின்றது. மூன்று பேரும் இறங்கினார்கள்.

ரிசப்ஷனில் காத்திருந்த அவுட்பேஷண்ட்கள் "வணக்கம்" சொல்லியபடி எழுந்து நிற்க - ரகுநாத் கைகளை குவித்துக் கொண்டே நடந்தார். வித்யப்ரகாஷும் சுபலாவும் அவரைத் தொடர்ந்தார்கள்.

கன்சல்டிங் அறையில் நுழைந்து - ஏ.ஸி.யின் ஜில்லிப்பில் நனைந்தபடியே ஃபோம் சோபாக்களில் உட்கார்ந்தார்கள்.

ஸ்டாஃப் நர்ஸ் எதிரே வந்து நின்றாள்.

ரகுநாத் தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜையின் மேல் வைத்தபடியே அவளை ஏறிட்டார்.

"ஓ.பி. இன்னைக்கு எத்தனை பேர்...?"

"முப்பத்திரெண்டு பேர் டாக்டர்..."

"எல்லார்க்கும் டோக்கன் குடுத்துட்டியா...?"

"குடுத்துட்டேன்..."

"எனி நியூ அட்மிஷன்...?"

"டெலிவரிக்காக வந்த ஒரு பெண்ணை அட்மிட் பண்ணியிருக்கு."

"ரெகுலர் பேஷண்டா...?"

"இல்ல டாக்டர்... அது ஒரு ரிக்ஷாகாரனோட மனைவி. பேரு வடிவுக்கரசி..."

ரகுநாத் நெற்றியைச் சுருக்கினார்.

''ரிக்ஷாக்காரனோட மனைவியா...?''

''ஆமா டாக்டர்...! இங்கே பிரசவகேஸ் பீஸ் ரொம்பவும் அதிகமாயிருக்கும்ன்னு சொன்னேன். பீஸ் எவ்வளவானாலும் பரவாயில்லை... என் னோட மனைவிக்கு இந்த ஆஸ்பத்திரியில்தான் பிரச வம் நடக்கணும்ன்னு சொல்லிட்டான். நான் எவ்வ ளவோ சொல்லிப் பார்த்தேன். அவன் கேட்கலை... அட்வான்ஸ் ஆயிரம் ரூபாய் 'பே' பண்ணியிருக் கான்.''

''ரூம் அலாட் பண்ணிட்டியா...?''

''பண்ணிட்டேன்...''

''எந்த பிளாக்...?''

''ஏ - ரூம் நெம்பர் ட்வெல்வ்...''

''டெலிவரி டைம்...?''

''நைன் மன்த்ஸ் கம்ப்ளீட்டட்... ரெண்டு மூணு நாளில் டெலிவரி ஆகலாம்...''

''ப்ரிலிமினரி டெஸ்ட்ஸ் பார்த்துட்டியா?''

''பார்த்துட்டேன்...''

''எனி அப் நார்மல்...?''

''நத்திங் டாக்டர்...''

''பொண்ணுக்கு என்ன ஏஜ்...?''

''முப்பத்தி ரெண்டு...''

''இதுக்கு முந்தி எவ்வளவு இஷ்யூஸ்...?''

''இதுதான் முதல் டாக்டர்... கல்யாணமாகி பத்து வருஷத்துக்கு அப்புறம் முதல்தடவையா உண்டாகி யிருக்கா...! பிரசவம் நல்லபடியா நடக்கணும்ங்கிற துக்காக... பணத்தைப் பத்தி கவலைப்படாமே நம்ம ஹாஸ்பிடலுக்கு அவ புருஷன் கொண்டு வந்திருக் கான்...''

''அந்தப் பொண்ணு கூட வேற யாரெல்லாம் வந்திருக்காங்க?''

''அவளும் அவ புருஷன் மட்டும்தான்...''

''புருஷன் ரூம்ல இருக்கானா...?''

''பெண்டாட்டி சாப்பிட ஏதோ கேட்டாள்னு இப்பத்தான் வெளியே போனான்...''

''சரி... பேஷண்ட்ஸ் இன்-ரோல் லெட்ஜரைக் கொஞ்சம் கொண்டுட்டு வா...''

ஸ்டாஃப் நர்ஸ் பக்கத்து அறைக்குள் நுழைந்து - சதுரமாய் இருந்த அந்த லெட்ஜரைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

''சரி...நீ ஓ.பி. வார்டுக்கு போ... ஒரு பத்து நிமிஷத்துல நான் அங்கே வர்றேன்...''

''எஸ்... டாக்டர்...''

அவள் போனதும் - லெட்ஜரைப் பிரித்த டாக்டர் ரகுநாத் அதன் பக்கங்களைப் புரட்டிப் பார்த்துக் கொண்டே சொன்னார்.

''நான் செலக்ட் பண்ணிட்டேன்...''

''யாரை...?''

''ரிக்ஷாகாரனோட பெண்டாட்டியை...''

''காரணம்...?''

''படிப்பறிவு இல்லாத ரிக்ஷாக்காரனுக்கு பிறக்கப்போகிற குழந்தையை சோதனைக்கு உட்படுத்தி - அதுல வெற்றியடையறதுதான்... உண்மையான வெற்றி...''

''அந்தப் பெண்ணைப் பார்க்கறீங்களா....?''

''லெட் அஸ் கோ...''

மூன்று பேரும் கிளம்பி 'ஏ' ப்ளாக்குக்கு வந்து 12 எண்ணிட்ட அறைக்குள் நுழைந்தார்கள்.

கட்டிலில் ஒருக்களித்துப் படுத்து - ஜன்னல் வழியே எதையோ ஆர்வமாய் பார்த்துக் கொண்டிருந்த வடிவுக்கரசி திரும்பினாள். பதட்டமாய் எழ முற்பட்டாள். வித்யப்ரகாஷ் கையமர்த்திக் கொண்டே அவளுக்கு பக்கத்தில் வந்து நின்றார்.

''அப்படியே படுத்துக்கோம்மா...''

அவள் கேட்காமல் சங்கோஜமாய் எழுந்து உட்கார்ந்தாள்.

"உம் பேரென்னமா...?"

"வடிவுக்கரசி..."

"இது உனக்கு முதல் பிரசவம் இல்லையா...?"

"ஆமாங்க..."

"இது எத்தனையாவது மாசம்...?"

"ஒம்பதாவதுங்க..."

"குழந்தை வயித்துக்குள்ள நல்லா அசையு தா...?"

"முட்டி முட்டி உதைக்குதுங்க..."

வித்யப்ரகாஷ் ரகுநாத்திடம் திரும்பி ஆங்கிலத் தில் பேசினார். "அந்தப் பெண் ஆரோக்கியமா இருக்கா... எம்ப்ரியோ ப்ரீச்சர் டெஸ்ட்டுக்கு இவ பொருத்தமா இருப்பாள்னு நினைக்கிறேன்..."

ரகுநாத்தும் ஆங்கிலத்திலேயே கேட்டார். "எக்ஸ்பரிமெண்டை எப்போ ஆரம்பிக்கிறீங்க...?"

"அடுத்த அரைமணி நேரத்துக்குள்ளே..."

இவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை புரிந்து கொள்ளாமல் வடிவுக்கரசி மூன்று பேர்களின் முகங்க ளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.



---

# 6

---

மாரியப்பன் ரிக்ஷாவை ரோட்டோரமாய் நிறுத்திவிட்டு - மிலிடரி நாய்க்கரின் பிரியாணி கடைக் குள் நுழைந்தான்.

கூட்டம் அவ்வளவாக இல்லை. தனியாக

ளில் மட்டும் விஸ்கி வாசனையோடு - சிலபேர் சாப் பிட்டுக் கொண்டிருந்தார்கள். பார்சல் செக்ஷனுக்குப் போய் அங்கிருந்த ஆளிடம் கேட்டான்.

"சூடா என்ன பிரியாணி இருக்கு...? மட்டனா... சிக்கனா...?"

"மட்டன்..."

"ஒரு ப்ளேட் பார்சல்..."

"வேறே...?"

"கோழி ரோஸ்ட் அரை பிளேட்..."

அந்த ஆள் உள்ளே போய்விட - மாரியப்பன் அங்கே இருந்த ஸ்டூலில் உட்கார முயன்ற - விநாடி - பின்பக்கமாய் அந்தக் குரல் கேட்டது.

"டேய்... மாரி..."

திரும்பிப் பார்த்தான்.

தனியறையின் தள்ளுகதவை திறந்து வைத்துக் கொண்டு அவனுடைய பழைய ரிக்ஷா தோஸ்த் வெள்ளிங்கிரி தெரிந்தான்.

மாரியப்பன் ஆர்வமாய் அவனை நோக்கிப் போனான். "இன்னாடா... வெள்ளிங்கிரி... எப்படி கீறே...?"

"ஷோக்குதான்...! உள்ளாற வா..."

கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனான். சிக்கனின் தொடை எலும்பைக் கடித்துக்கொண்டு மேலும் இரண்டு பேர் தெரிந்தார்கள்.

"மாரி... இவங்க ரெண்டுபேரும்... நான் வேலை பார்க்கிற ஃபேக்டரியில் ஃபோர்மேன்களா இருக் காங்க...! உட்காரு... பிரியாணி சொல்லட்டுமா...?"

"வேண்டாம்... வெள்ளிங்கிரி... நான் பிரியாணி பார்சல் சொல்லியிருக்கேன்... வாங்கிட்டு ஆஸ்பத்தி ரிக்கு போகணும்..."

"ஆஸ்பத்திரிக்கா...?"

"ம்... வடிவு முழுவாமே இருக்கா... இது ஒம்ப தாவது மாசம். கொஞ்சம் உறைப்பா சாப்பிடணும்...

போய் பிரியாணி வாங்கியா மாமான்னு சொன்னா... அதான் வந்தேன்..."

"அடிச்சக்கை... கல்யாணமாகி பத்து வருஷத் துக்கப்புறம்... அப்பா ஆகப்போறியா...? அதான் முஞ்சியெல்லாம்... மினுமினுப்பா கீது... அது சரி சவாரி எப்படி போகுது...?"

"பெட்ரோல் விலை தாறுமாறா ஏறி... ஆட்டோ சார்ஜெல்லாம் ஜாஸ்தியான பிறகு... ஜனங்க... ரிக் ஷால ஏற ஆரம்பிச்சிருக்காங்க..."

"அட... உட்கார்ந்து பேசு... மாரி... எத்தினி நாள் கழிச்சு பார்த்திருக்கோம்...?"

மாரியப்பன் உட்கார்ந்தான்.

"ஸ்காட்ச் சரக்கு இருக்கு... ஒரு பெக் அடிக்கி றியா?"

"வேண்டாம்... வெள்ளிங்கிரி... இந்த கசுமா லத்தை எல்லாம் கையில தொட்டு ரொம்ப நாளாச் சு..."

வெள்ளிங்கிரி 'பகபக'வென்று சிரித்தான். "என்ன மாரி ஒரேயடியா புத்தனாயிட்டே... அப்படி யெல்லாம் ஒட்டு மொத்தமா திருந்தினா... உடம்புக்கு ஒத்துக்காது... சும்மா ஒரு பெக்கை உள்ளார தள்ளு... வாசம் அடிக்காது... நரம்பெல்லாம் கம்பளியை போர்த்துகிட்ட மாதிரி கதகதன்னு இருக்கும்..."

"வேண்டாம்... வெள்ளிங்கிரி... நான் கிளம்ப றேன். பார்சல் வந்திருக்கும்..."

சொல்லிக்கொண்டே மாரியப்பன் எழ முயன்ற விநாடி -

அறையின் தள்ளுகதவு படீரென்று -

திறந்தது.

தொடர்ந்து -

ஒரு சப்-இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்ட பிள்களும் பூட்ஸ் சத்தங்களோடு உள்ளே நுழைந்து - நான்கு பேரையும் சூழ்ந்தார்கள்.

"ஏண்டா ரோட்ல போற பொண்ணுககிட்டேயி

ருந்து... செயினை ஸ்நேட்ச் பண்ண வேண்டியது... ஏதோ ஒரு விலைக்கு விக்க வேண்டியது. கையில இருக்கற வரைக்கும் குடிச்சுட்டு பிரியாணியா சாப்பிட வேண்டியது. கையில காசு தீர்ந்ததும் மறுபடியும் எந்த பொண்ணு கழுத்துல நகையிருக்குன்னு பார்க்க வேண்டியது... பைக்ல போய் பருந்து மாதிரி அடிக்க வேண்டியது...''

சப்-இன்ஸ்பெக்டரின் கையிலிருந்த தடி - சண்டமாருதமாய் சுழல - நான்கு பேரும் அலறினார்கள். மாரியப்பன் ஒரு சிலவிநாடிகள் ஸ்தம்பித்து பின் அலறினான். ''ஸார்... நானில்ல...! இவனை... சும்மா பாக்க வந்தேன்... எம் பொண்டாட்டிக்கு பிரியாணி வாங்கறதுக்காக... இந்த ஹோட்டலுக்கு...''

''என்னடா... கதை விடறே...?'' - மாரியப்பனின் நடுமுதுகில் வீசியது போலீஸ் லத்தி. ''கூட்டுக் களவாணி பசங்களா... டிப்டாப்பா ட்ரஸ் பண்ணிக்க வேண்டியது... பைக்ல ஏர் பெட்ரோலை ஊத்திக்க வேண்டியது. கடைவீதி, கோயில் குளம் பக்கமா நின்னுகிட்டு... எந்த பொம்பளை கழுத்துல செயின் இருக்குன்னு பார்க்க வேண்டியது. பைக்கை ஸ்டார்ட் பண்ணி ராஜாளி மாதிரி தட்டிகிட்டு போயிட வேண்டியது...''

நான்கு பேரும் - அறையினின்றும் வெளியே தள்ளப்பட்டு - வாசலில் நின்றிருந்த போலீஸ் வேனை நோக்கி இழுபட்டார்கள்.

மாரியப்பன் அலறினான்.

''ஸ...ஸார்... நான் சொல்றதைக் கேளுங்க... எனக்கும் இவங்களுக்கும்...''

''பேசாதே...! உதை விழும்... நீ எதைச் சொல்றதாயிருந்தாலும் ஸ்டேஷனுக்கு வந்து சொல்லு...''

திமிறிய மாரியப்பனை இரண்டு கான்ஸ்டபிள்கள் குண்டுகட்டாய் தூக்கி வேனுக்குள் போட்டார்கள்.

● ○ ●

# 7

கார்க் பாக்ஸுக்குள் - போர்ட்டபிள் டி.வி. சைஸில் இருந்த கம்ப்யூட்டர் எம்ப்ரியோ ப்ரீச்சரை -ஒரு குழந்தையை எடுப்பதுபோல் மெதுவாய் எடுத்தார் வித்யப்ரகாஷ்.

க்ரே நிறத்தில் - சிறிய மானிடரி திரையோடு அது தெரிந்தது. சின்னச் சின்னதாய் சிறிய சதுர பட்டன்கள் மெட்டாலிக் பூச்சோடு மின்னின. VOCABALARY STAGES என்ற வாசகம் பொடி எழுத்துக்களோடு பார்வைக்கு கிடைத்தது.

டாக்டர் ரகுநாத்தும் - சுபலாவும் அந்த எம்ப்ரியோ ப்ரீச்சரை வியப்பாய் பார்த்தார்கள்.

"ஒவ்வொரு வரிசையும் ஒவ்வொரு [illegible]லரி ஸ்டேஜை குறிக்கும்..."

"வொகாபலரி ஸ்டேஜ்ன்னா... என்ன அர்த்தம்...?"

"கருவில் இருக்கிற குழந்தைக்கு எடுத்த எடுப்பிலேயே ஒரு மொழியின் எழுத்துக்களை சொல்லித் தர முடியாது... ஆரம்ப நிலையிலிருந்துதான் போகணும்... ஃபர்ஸ்ட் ஸ்டேஜில் வெறும் ஒலிகள் மட்டுமே கேட்கும்... இரண்டாவது ஸ்டேஜில் குழந்தையின் மூளைப்பிரதேசத்தில் இருக்கும் உயிரணுக்களின் மாலிக்யூல்களை உசுப்புகிறோம்..." சொன்ன வித்யப்ரகாஷ் ரகுநாத்தையும் சுபலாவையும் புன்னகையுடன் பார்த்தார். "தியரிடிகலாய் இந்த கம்ப்யூட்டரைப் பற்றி எவ்வளவு நேரம் விளக்கிச் சொன்னாலும் உங்களுக்குப் புரியாது. இதனோட செயல்பாட்டை ப்ராக்டிகலாய் பார்த்தால்தான் புரியும்..."

சுபலா கேட்டாள்.

"இந்த எக்ஸ்பரிமெண்ட்டை அந்தப் பெண் ணுக்கு... எங்கே வெச்சு பண்ணப்போறீங்க ஸார்...?"

"யாரோட குறுக்கீடும் இல்லாத ஆப்ரேஷன் தியேட்டர்ல வெச்சுத்தான் இந்த எம்ப்ரியோ பிரிச்சர் எக்ஸ்பரிமெண்டை பண்ண முடியும்..."

டாக்டர் ரகுநாத் வாட்சைப் பார்த்தார். "ராத்திரி ஒன்பது மணிக்கு மேல் அந்த ரிக்ஷாகாரன் பெண் டாட்டியை - ஆபரேஷன் தியேட்டர்க்கு கொண்டு போயிடலாமா?"

வித்யப்ரகாஷ் தலையாட்டினார்.



# 8

வெறும் ஜட்டியோடு - லாக்கப்புக்குள் குத் துக்காலிட்டு உட்கார்ந்திருந்த மாரியப்பனைப் பார்த்து கத்தினார் அந்த கான்ஸ்டபிள்.

"வாடா... முன்னாடி வந்து நில்லு..."

"அ... அய்யா...! என் பொண்டாட்டி பிரசவத் துக்காக... ஆஸ்பத்திரியில..."

"டேய்...! நீயா எதையும் பேசக்கூடாது...! நான் என்ன கேள்வி கேட்கறேனோ அதுக்கு மட்டும் பதில் சொன்னா போதும்..."

"கேளுங்கய்யா..."

"வெள்ளிங்கிரி உனக்கு தோஸ்துதானே...?"

"ஆமாங்கய்யா..."

"அவனும் நீயும் சேர்ந்து... இதுவரைக்கும் எத் தினி பொம்பளைங்க கிட்டே நகையை பறிச்சிருப் பீங்க...?"

"அ... அய்யா... எனக்கு அந்த திருட்டு புத்தியெல்லாம் இல்லைங்க... வெள்ளிங்கிரி ரிக்ஷா ஓட்டிட்டு இருக்கும்போது என்கூட சிநேகிதமா இருந்தான்... அந்த தொழிலை விட்டுட்டு அவன் வேற வேலைக்கு போனப்புறம்... நான் அவனைப் பார்க்கவேயில்லை..."

நாற்காலியைத் தள்ளிக்கொண்டு பிரம்போடு எழுந்தார் இன்ஸ்பெக்டர். "ஏண்டா... நாலுபேரும் சேர்ந்து - ஒண்ணா உக்கார்ந்து பிரியாணி சாப்பிடற அளவுக்கு உங்களுக்குள்ள நெருக்கம் இருந்திருக்கு... நீ என்னடான்னா... விஷயத்தையே முழுங்கறியே...? இந்த பிரம்பால அடி வாங்கியிருக்கியா...?"

"அ.. அய்யா... அடிக்காதீங்க... எம் பொண்டாட்டிக்கு பிரியாணிவாங்கறதுக்காக அந்த ஹோட்டலுக்கு போனேன்... வேணும்னா அந்த ஹோட்டல் கல்லாவுல உட்கார்ந்திருந்த முதலாளியைக் கேட்டுப் பாருங்கய்யா..."

"நீ சொல்லி நான் என்னடா அவங்களை கேட்டுப் பாக்கிறது... திருட்டு ராஸ்கல்...! உன்னோட தோஸ்த் வெள்ளிங்கிரி ஏதோ வேலைக்கு போறதா சொல்லிகிட்டே... ஊர் பூரா திருடியிருக்கான். நீ ரிக்ஷா ஓட்ற மாதிரி பாவ்லா காட்டிக்கிட்டு அவனுக்கு ஒத்தாசை... பண்ணி..."

"சத்தியமா இல்லீங்கய்யா...! எம் பொண்டாட்டியை குட்லக் நர்சிங்ஹோம்ல..."

"பேசாதே...!"

பிரம்பால் ஒரு விறு விறினார். அது மாரியப்பனின் தோளில் பட்டு - நெருப்பைப்போல் சுட்டது.

"நகைகளை கொண்டுபோய் எங்கெல்லாம் வித்தீங்க...?"

"நான் திருடனில்லீங்கய்யா..."

இன்ஸ்பெக்டரின் வலது பூட்ஸ்கால் சட்டென்று கோபமாய் நீண்டு - மாரியப்பனின் தொடையை உதைக்க - அவன் அலறிக்கொண்டு மண்டியிட்டு உட்கார்ந்தான். "அ... அ...ய்யா..."

"பொய் பேசினே... முட்டி எலும்பை ஒடிச்சிடு வேன். நீயும் அவனும்... நகைகளை... எங்கே கொண்டுபோய் வித்தீங்க..."

"எ... எனக்கு... ஒண்ணும் தெரியாதய்யா... நான் எம்பொண்டாட்டிக்கு பிரியாணி வாங்கறதுக் காக..."

இன்ஸ்பெக்டரின் முகம் கோபத்துக்கு போயிற்று. கையிலிருந்த பிரம்பை வீசிவிட்டு - இடுப்பு பெல்ட்டை அவிழ்த்துக் கொண்டார்.





குட்லக் நர்ஸிங் ஹோம்.

டூ வீலர்ஸ் பார்க்கிங்கில் யமஹாவை நிறுத்தி விட்டு - ரூபலாவோடு உள்ளே போனான் விவேக். ஹாஸ்பிடல் அமைதியாய் இருந்தது.

ரூபலா வியந்தாள்.

"யம்மாடி! எவ்வளவு பெரிய ஹாஸ்பிடல்..."

"சிட்டியில் இன்னிக்கு இதுதான் நெம்பர் ஒன்... டாக்டர் ரகுநாத், டாக்டர் செரியன் ரெண்டு பேரும் சேர்ந்து உருவாக்கின ஹாஸ்பிடல் இது. டாக்டர் செரி யன் இப்ப... உயிரோடு இல்லை..."

விஸ்தாரமான மார்பிள் தரையில் நடந்து - என் கொய்ரி கௌண்டர்க்கு வந்தார்கள். பயாப்ஸி ரிப் போர்ட் ஒன்றை - பேஷண்ட்டுக்கு படித்துக் காட்டிக் கொண்டிருந்த அந்த நர்ஸ் விவேக்கின் வருகையால் கலைந்தாள்.

"எஸ்..."

"ரிடையர்ட் டி.எஸ்.பி. ராமலிங்கம்... எந்த வார்டுல அட்மிட் ஆயிருக்கார்...?"

"செகண்ட் ப்ளோர்ல... 'பி' டைப் ஸ்பெஷல் ரூம்..."

"தேங்க்யூ..."

நடந்தார்கள். மாடிப்படிகளில் உயர்ந்து முதல் மாடி வராந்தாவுக்கு வந்தார்கள். ரூபலா மறுபடியும் வியந்தாள்.

"ஹாஸ்பிடல் ரொம்பவும் நீட்டா இருக்கு. ஒவ்வொரு பொருளிலேயும் சுத்தம் தெரியுது..."

"வழக்கமா ஆஸ்பத்திரிக்கு போனா ஒரு நெடி அடிக்கும். அந்த நெடி கூட இல்லை பார்த்தியா...?"

"இந்த என்விரான்மெண்ட்ல எந்த பேஷண்டுக்கும்... நோய் சீக்கிரமாவே குணமாயிடும்..."

- பேசிக் கொண்டே இரண்டாவது மாடியின் படிகளில் ஏறப் போன ரூபலாவை அந்தக் குரல் சட்டென்று நிறுத்தியது.

"ஏ...ஏய் ரூபி..."

திரும்பினாள்.

மாடி வராந்தாவில் பம்மிய வயிற்றோடு - மெதுவாய் நடந்து வந்து கொண்டிருந்த அந்த இளம்பெண் கையசைத்தாள்.

அவளைப் பார்த்ததுமே ரூபலா மலர்ந்தாள்.

"ஏய்... சொப்னா... நீயா...?"

"நானேதான்..."

"என்னடி இது... ரெண்டு வருஷத்துக்கு முந்தி ஒரு நாள் கடைவீதியில் பார்க்கிறபோதும் வயித்தை தள்ளிக்கிட்டு இருந்தே... இப்பவுமா...? இந்திய ரூபாய் மதிப்பு குறைஞ்சுட்டு போறதுக்கு உன்னை மாதிரியான பெண்கள்தாண்டி காரணம்..."

"பொரியாதே..."

"பொரியாமே எப்படி இருக்கிறது...? இது மூணாவது குழந்தைதானே...?"

"ஆமா...! முந்தி பொறந்தது ரெண்டும் பொண்ணு. அவர்க்கு ஒரு ஆம்பளைக் குழந்தை வேணும்னு ரொம்ப ஆசை... அதான்..."

"பொறக்கப் போறது பையன்தான்னு... எப்படி தெரியும்...? இதும் பொண்ணா இருந்துட்டா..."

"ஸ்கேன் எடுத்து பார்த்துட்டோமே...?"

ரூபலா விவேக்கிடம் திரும்பினாள். "என்னங்க... இவ சொப்னா... பெங்களூர்ல படிச்சிட்டிருக்கும்போது எனக்கு காலேஜ் மேட். ஹஸ்பெண்ட் ஷிப்பிங் கார்ப்பரேஷன்ல என்ஜினியரா இருக்கார்..."

"வணக்கம்..." கைகளைக் குவித்த சொப்னா கேட்டாள். "ஹாஸ்பிடல்ல யாரைப் பார்க்க வந்தீங்க...? யார்க்கு என்ன உடம்பு...?"

ரூபலா சொன்னாள் - "ரிடையர்ட் போலீஸ் ஆபீஸர் ஒருத்தர்... ஹார்ட் பேஷண்ட்... அவரைப் பார்க்கிறதுக்காக வந்தோம்... ஆமா உனக்கு எப்போ டெலிவரி டைம்...?"

"இன்னும் பத்து நாள் இருக்கு..."

"அதுக்குள்ள ஏன் ஹாஸ்பிடலுக்கு வந்தே...?"

"வீட்டுக்காரர் கேட்டாத்தானே...? நான் எவ்வளவு சொல்லியும் அதை காதுல போட்டுக்காமே... விடாப்பிடியா கொண்டுவந்து அட்மிட் பண்ணிட்டார். ரெண்டாவது டெலிவரியின் போது கொஞ்சம் கஷ்டப்பட்டேன்... அதனால்தான்..."

"சரி... உனக்கு டெலிவரியானதும் தகவல் கொடு. வந்து பார்க்கிறேன்..."

"கண்டிப்பா வரணும்..."

"வர்றேன்..."

சொப்னாவிடம் விடைபெற்றுக்கொண்டு -இரண்டாவது மாடிக்குப் போகிற படிகளில் ஏறினார்கள் விவேக்கும் ரூபலாவும்.

இரண்டாவது மாடி வராந்தாவுக்கு வந்து 12-ம் எண் அறையைக் கடக்கிறபோது - உள்ளேயிருந்து

அந்த பெண்ணின் பாமரத்தனமான அழுகுரல் சத்தத்தைக் கேட்டு விவேக் நின்றான்.

"பிரியாணி வாங்கப்போன என்னோட மாமன்... இன்னும் வல்லே. அவரு...வந்துரட்டும்..."

அந்த நர்ஸ் அதட்டிக் கொண்டிருந்தாள். "இதோ... பார்... இப்படியெல்லாம் அடம் பிடிக்கக் கூடாது... உனக்கு சில டெஸ்ட்டெல்லாம் பண்ணனும்... டாக்டர் எக்ஸ்ரே தியேட்டர்ல காத்திட்டிருக்காரு... ஸ்ட்ரெச்சர்ல ஏறிப்படு..."

"நான் மாட்டேன். என் மாமனைப் பார்க்காமே நான் வரமாட்டேன்."

"பிரியாணி வாங்கப்போன உன்னோட மாமன் வர்றவரைக்கும் டாக்டர் காத்திட்டிருக்க மாட்டாரு... உனக்கு டெஸ்ட்டெல்லாம் பண்ண வேண்டாமா... ம்... ஏறி படு. கொஞ்ச நேரத்துல வந்துடலாம்..."

விவேக்கும் ரூபலாவும் புன்னகைத்தபடி நடந்தார்கள். "யாரோ கிராமத்து பொண்ணு போலிருக்கு..."

● ○ ●

# 10

எக்ஸ்ரே - தியேட்டரில் காத்திருந்தார் டாக்டர் ரகுநாத். அருகில் சுபலா.

நர்ஸ்கள் இரண்டு பேரும் வெறும் ஸ்ட்ரெச்சரைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தார்கள். சுபலா வியப்பாய் கேட்டாள்.

"எங்கே அந்தப் பொண்ணு..."

''அவ மாமனைப் பார்க்காமே வரமாட்டேன்னு சொல்லிட்டா டாக்டர்.''

''மாமன்னா புருஷனா?''

''ஆமா...''

''அவன் எங்கே போயிருக்கான்...?''

''பிரியாணி வாங்கப் போனானாம்...''

''எப்போ...?''

''ஒரு மணி நேரத்துக்கு முந்தி...''

''பொண்டாட்டிக்கு பிரியாணி வாங்கப் போனவன் எங்கேயாவது படுத்து தூங்கிட்டானோ... என்னவோ...? இதமா அவளுக்கு எடுத்துச் சொல்லி கூட்டிட்டு வரவேண்டியதுதானே...?''

''பிடிவாதமா வரமாட்டேன்னு சொல்லிட்டா டாக்டர். ரொம்பவும் கட்டாயப்படுத்தினா அழறா... ஹாஸ்பிடலுக்கு வந்த விஸிட்டர்ஸ் எல்லாம் வேடிக்கை பார்க்க ஆரம்பிச்சுட்டாங்க...''

''சரி... நீங்க... போங்க...''

நர்ஸ்களை அனுப்பிவிட்டு சுபலாவைப் பார்த்தார் ரகுநாத்.

''புருஷனை பார்க்காமே வரமாட்டேன்னு சொல்றாளாமே...?''

''அங்கிள்... ஒரு யோசனை...''

''என்ன...?''

''அந்தப் பொண்ணுக்கு ஒரு செடக்டிவ் இஞ்செக்ஷனைப் போட்டு தியேட்டர்க்கு கொண்டு போயிட்டா என்ன...?''

''அப்படித்தான் பண்ணணும். வேற வழியில்லை... நீ போய் அதுக்கான ஏற்பாடுகளைப் பண்ணு சுபலா. நான் வித்யப்ரகாஷைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிட்டு வந்துடறேன்...''

தலையை ஆட்டிய சுபலா வேகமாய் அங்கிருந்து நகர்ந்தாள்.

# 11

இன்ஸ்பெக்டர் தனக்கு எதிரே நின்றிருந்த வெள்ளிங்கிரியையும் - மற்ற இரண்டு பேர்களையும் அடித்து துவைத்து விசாரித்துக் கொண்டிருந்த போது - சப்-இன்ஸ்பெக்டர் கனகராஜ் வாசலில் வந்து நின்றார்.

"ஸார்..."

"என்ன கனகராஜ்...?"

"ஒரு நிமிஷம்... இப்படி வர்றீங்களா...?"

இன்ஸ்பெக்டர் வந்தார். கனகராஜ் ஓரமாய் கூட்டிப் போய் சொன்னார் மெல்லிய குரலில்.

"ஸார்... அந்த மாரியப்பன் தப்பி ஓடிட்டான்."

"என்னது...? தப்பி ஓடிட்டானா... எப்படி...?"

"லாக்கப்பில் இருந்தவன் திடீர்ன்னு வயித்தை வலிக்குது... டாய்லெட் போகணும்னு சொன்னான்... த்ரீ நாட் ஃபோரை அவன் கூட வெச்சு... டாய்லெட்டுக்கு அனுப்பி வெச்சேன். அரை மணி நேரமாகியும் ரெண்டு பேரும் திரும்பாமே போகவே - டாய்லெட் பக்கமா போய்ப் பார்த்தேன். த்ரீ நாட் ஃபோர் மயக்கமா கிடந்தாரு..."

"மை குட்னஸ்..."

"கான்ஸ்டபிளை எழுப்பி விசாரிச்சேன்... மாரியப்பன் அவரை தாக்கிட்டு பின்பக்கமா சுவர் ஏறி குதிச்சு தப்பிச்சு போயிருக்கான்..."

"கண்ட்ரோல் ரூமுக்கு நியூஸை அனுப்பிட்டீங்களா...?"

"அனுப்பிட்டேன் ஸார்..."

"கேம்ப் போயிருக்கிற ஏ.சி. ஸ்டேஷன் திரும்பறதுக்குள்ளே அந்த மாரியப்பனை மறுபடியும் லாக்கப்புக்கு கொண்டு வந்தாகணும்..."



# 12

"ஸார்..."

"ம்..."

"குழந்தையோட அசைவுகளை கவனிச்சீங்களா...?"

"கவனிச்சுட்டுதான் இருக்கேன்..."

"ஒரு புழுவை குச்சியால் குத்தறப்போ... அது அவஸ்தையாலே எப்படி துடிக்குமோ... அது மாதிரி... குழந்தை அவஸ்தைபடுது... இட் ஸீம்ஸ் டு... பி... பேதடிக்..."

வித்யப்ரகாஷ் அவளை ஏறிட்டபடி புன்னகைத்தார். "குழந்தையோட மூளைப் பிரதேசத்தில் தூங்கிகிட்டு இருக்கிற உயிரணுக்களின் மாலிக்யூல்களை கம்ப்யூட்டரோட வொகாபலரி ஸ்டேஜ் உசுப்பற முயற்சியில் ஈடுபட்டிருக்கு... இது ஆரம்ப அவஸ்தைதான்... போக போக சரியாயிடும்..."

டாக்டர் ரகுநாத் மறுத்து தலையாட்டினார். "நோ... மிஸ்டர் வித்யப்ரகாஷ்... இந்த மூவ்மெண்ட்ஸ் எனக்கு கொஞ்சம் விபரீதமா படுது... எக்ஸ்பரிமெண்ட்டை நிறுத்திடறது பெட்டர்ன்னு என் மனசுக்குப் படுது..."

"ரிடிகுலஸ்! எக்ஸ்பரிமெண்ட்டை நிறுத்த

றதா...? டாக்டர்! யூ... டோண்ட்... ஒர்ரி... தாய்க்கோ குழந்தைக்கோ எந்த ஆபத்தும் வராது...''

டாக்டர் ரகுநாத் அந்த ஏ.ஸி அறையிலும் வியர்த்துப் போன முகத்தோடு - வடிவுக்கரசியின் இதயத்துடிப்பைக் காட்டும் ஈ.சி.ஜி கிராப்பையே பார்த்துக் கொண்டிருந்தார்.

விநாடிகள் வீழ்ந்து நிமிஷங்களாய் - மாறி - ஒரு அரை மணி நேரம் கழித்திருந்த போது -

கம்ப்யூட்டரின் மானிட்டர் திரை - குழந்தையின் அசைவுகளை காட்ட மறுத்து - மௌனம் சாதித்தது.

வித்யப்ரகாஷின் முகம் சட்டென்று - இருட்டுக்குப் போய் - ஒரு திகில் உணர்வில் விழுந்தது.

● ○ ●

# 13

மாரியப்பன் மூச்சிரைக்க ஓடிவந்து - அந்த இருட்டான குப்பத்துக்குள் நுழைந்து ஒரு குடிசையின் முன் நின்றான்.

உள்ளே நுழைந்து கதவைச் சாத்தி விட்டு - கயிற்றுக் கட்டிலில் போய் உட்கார்ந்தான். பங்காரு அவனுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தபடி தோளில் கைபோட்டான்.

''என்னமோ... போலீஸுக்கு பயந்து ஓடிவார்ற மாதிரி வர்றியே? என்னா விஷயம்...?''

மாரியப்பன் நீர் நிறைந்த விழிகளோடு நிமிர்ந்தான்.

''பங்காரு...! நெஜம்மாவே நான் போலீஸ் கையில மாட்டிகிட்டேன்.''

தான் போலீஸிடம் மாட்டிக்கொண்ட சூழ்நிலையை - அழுகைக் குரலில் விவரித்து முடித்தான் மாரியப்பன். பங்காரு கவலையாய் தாடையைத் தடவினான்.

''சரி... போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தப்பிச்சதும் - நேரா ஆஸ்பத்திரிக்குப் போய் உம் பெண்டாட்டியைப் பார்த்தியா...?''

''இல்ல...''

''ஏன்...?''

''அந்த இன்ஸ்பெக்டர் என்னை விசாரிச்சப்ப... ரெண்டு மூணு தடவை குட்லக் ஹாஸ்பிடலோட பேரை சொல்லிட்டேன்... ஒரு வேளை போலீஸ் அங்கே போய் காத்திட்டிருந்தா...?''

''அதுவும் சரிதான்! சரி...! இப்ப என்ன பண்ணப் போறே?''

''நான் எதுவும் பண்ணப் போறதில்லை... நீ தான் பண்ணப் போறே?''

''சொல்லு...''

''நீ இப்ப நேரா குட்லக் ஹாஸ்பிடலுக்கு போறே. போய் என் வடிவைப் பார்த்து விஷயத்தை சொல்றே... அவ அழுவா. நீதான் தைரியம் சொல் லிட்டு வரணும்...''

''நீ...?''

''இன்னிக்கு ராத்திரி உன்னோட குடிசைதான் எனக்கு ஜாகை. நாளைக்கு காலைல பத்து மணிக்கு நம்ம ரிக்ஷா சங்கத்தலைவர் கிட்டே போய் - விஷயத்தை சொல்லி சங்க வக்கீல் மூலமா... போலீஸ் ஸ்டேஷனுக்கு போகப் போறேன்...''

''சரி ஏதாவது சாப்பிட்டியா...?''

''எனக்கு ஒண்ணும் வேணாம்... நீ போய் மொதல்ல வடிவைப் பார்த்து தைரியம் சொல்லிட்டு வா...''

பங்காரு கட்டியிருந்த கைலியை அவிழ்த்து விட்டு நல்லதாய் ஒரு பேண்ட் சர்ட்டை எடுத்து மாட்டிக்கொண்டான்.

''நீ படுத்து தூங்கு... நான் ரிக்ஷாவிலேயே போய்ட்டு வந்துடறேன்.''

''போகும்போது வூட்டை வெளிப்பக்கமா பூட்டிகிட்டு போயிடு. இல்லேன்னா எவனாவது வந்து கதவைத் தட்டப் போறான்...''

''அதும் சரிதான்...'' பங்காரு சுவர்த்திட்டின் மேலிருந்த பூட்டையும் சாவியையும் எடுத்துக் கொண்டான்.



# 14

கம்ப்யூட்டரின் மானிட்டர் திரையைப் பார்த்து - வித்யப்ரகாஷ் பதட்டப்பட்டார். அதனை உயிர்ப் புக்கு கொண்டு வரும் முயற்சியில் இருக்கும்போதே - ரகுநாத் கத்தினார்.

''வித்யப்ரகாஷ்! ஈ.சி.ஜியைப் பாருங்க....''

பார்த்தார்.

வடிவுக்கரசியின் இருதயத்துடிப்பு அடங்கிக் கொண்டிருந்தது.

கத்தினார்.

''சுபலா! ப்ரிங் தட் ஆக்ஸிஜன் போஸ்ட்.''

சுபலா ஓடி - சுவரோரமாய் இருந்த ஆக்ஸிஜன் சிலிண்டர் கம்பத்தை நகர்த்திக் கொண்டு வந்தாள்.

''சீக்கிரமா ஃபிக்ஸ் பண்ணு..''

பிராணவாயு குழாயை - மூக்கு துவாரங்களில் இணைப்பதற்குள் வடிவுக்கரசியின் இருதயம் அடங்க - எலக்ட்ரோ கார்டியோ க்ராப்பில் - பச்சைக் கோடு தொலைந்து போயிற்று.

சுபலா அவசர அவசரமாய் - வடிவுக்கரசியின் இருதயத்தை குத்தி, பிசைந்து - உயிரூட்ட முயற்சித்து - முடியாமல் - சோர்வாய் நிமிர்ந்தாள்.

''ஷி... ஈஸ்... டெட்...''

வித்யப்ரகாஷ் தர்மசங்கடமாய் நெற்றியைத் தேய்த்தார். ''நான் இதை எதிர்பார்க்கலை.. கம்ப்யூட்டர்ல எங்கே தப்புன்னு கண்டுபிடிக்கணும்...''

ரகுநாத் தளர்ந்துப் போய் அங்கிருந்த ஸ்டூலில் உட்கார்ந்தார். ''இந்தப் பொண்ணோட மரணத்துக்கு

என்ன காரணத்தை சொல்லப் போறோம்... இவ ளோட புருஷன் வந்து காத்திட்டிருப்பானே..."

"திடீர்னு வலிப்பு வந்து இறந்துட்டாள்னு சொல்லி பாடியை ஒப்படைக்க வேண்டியது..."

"இவ புருஷன் நம்புவானா?"

"நம்பற மாதிரி சொல்ல வேண்டியதுதான்..." வித்யப்ரகாஷ் சொல்லிக்கொண்டே வடிவுக்கரசியின் வயிற்றைச் சுற்றியிருந்த - மேக்னடிக் ஒயர்களை தளர்த்த ஆரம்பித்தார். ரகுநாத் சுபலாவை ஏறிட்டார்.

"சுபலா..."

"அங்கிள்..."

"ரிசப்ஷனை காண்டாக்ட் பண்ணி இந்த பொண் ணோட புருஷன் வந்திருக்கானான்னு கேளு..."

தலையாட்டியவள் - ஆபரேஷன் தியேட்டரி னின்றும் வெளிப்பட்டு பக்கத்து அறைக்குள் நுழைந்து - அங்கிருந்த இண்டர்காம் ரிஸீவரை எடுத் தாள்.

பட்டனைத் தட்டிவிட்டு -

"ரிசப்ஷன்...?" என்றாள்.

"எஸ்..."

"பேசறது யாரு... லீலாவா...?"

"ஆமா டாக்டர்..."

"தன்னோட மனைவியை அட்மிட் பண்ணிட்டு போன ரிக்ஷாக்காரன் திரும்ப வந்திருக்கானா...?"

"வரலை டாக்டர்... ஆனா..."

"என்ன ஆனா...?"

"அந்த ரிக்ஷாக்காரனுக்கு பதிலா... வேற ஒருத் தன் வடிவுக்கரசியைப் பார்க்கணும்னு வந்து உட் கார்ந்திட்டிருக்கான்... அவளுக்கு வேண்டியவனாம்."

"அவன் பேர் என்னான்னு கேட்டியா...?"

"கேட்டேன்..."

"என்ன பேரு..."

''பங்காரு...''

''அந்த ஆள் இப்ப எங்கே இருக்கான்...?''

''போர்டிகோவுக்கு பக்கத்தில இருக்கிற திட்டு மேல உட்கார்ந்திட்டிருக்கான்.''

சுபலா ரீஸிவரை வைத்துவிட்டு - ஆபரேஷன் தியேட்டர்க்கு வந்தாள். ரகுநாத் கேட்டார். ''என்ன புருஷன்காரன் வந்துட்டானா...?''

''புருஷன்காரன் வரலை... அவனுக்குப் பதிலா 'பங்காரு'ன்னு எவனோ ஒருத்தன் வந்து - இந்தப் பொண்ணை பார்க்கணும்ன்னு காத்திட்டிருக்கா னாம்...''

ரகுநாத் எழுந்தார்.

''வா... அவனைப் போய் - பார்த்து விஷயத்தை சொல்லிடலாம். பாடியை ராத்திரியோடு ராத்திரியா வெளியே அனுப்பிடறது பெட்டர்.''

ரகுநாத்தும் சுபலாவும் - இரண்டு நிமிஷ நடை நடந்து போர்டிகோவுக்கு வந்தார்கள். பங்காரு எழுந்து கும்பிட்டான்.

''டாக்டரய்யா...! நான் வடிவுக்கரசியைப் பார்க்க ணும்.''

''நீ அவளுக்கு என்ன ஆகணும்...?''

''அந்தப் பொண்ணு எனக்கு கொஞ்சம் தூரத்து உறவுங்க...''

''அவளோட புருஷன்காரன் எங்கே...?''

''தெரியலைங்க... வடிவுக்கரசி இந்த ஆஸ்பத்தி ரியில பிரசவத்துக்காக அட்மிட் பண்ணியிருக்கிறதாய் குப்பத்துல பேசிகிட்டாங்க... அதான் பாத்துட்டு போலாம்ன்னு வந்தேன்...''

ரகுநாத் வருத்தம் மேலிட பேசினார். ''இதோ பாரப்பா... குழந்தை பேறுக்காக வந்த அந்தப் பெண் ணுக்கு நடக்கக்கூடாது நடந்துடுச்சு...''

பங்காரு அதிர்ச்சியாய் நிமிர்ந்தான்.

''அய்யா... என்ன சொல்றீங்க...?''

''அந்தப் பொண்ணுக்கு திடீர்ன்னு வலிப்பு வந்

தது... கூடவே பிரசவ வலியும்... சிசேரியன் ஆபரேஷன் பண்ணி குழந்தையை வெளியே எடுக்க முயற்சி பண்ணினோம் அதுக்குள்ள செத்துட்டா...''

''அ... அய்யா...''

''அந்தப் பொண்ணைக் காப்பாத்தறதுக்காக எவ்வளவோ முயற்சி பண்ணினோம்... முடியலை... பொண்ணோட புருஷன்காரன் எங்கே இருக்கான்னு கண்டுபிடிச்சு தகவல் சொல்லி கூட்டிகிட்டு வா... பாடியை உடனடியாய் வீட்டுக்கு கொண்டு போயிடலாம்...''

பங்காரு ஓடினான்.



# 15

போலீஸ் ஸ்டேஷன்.

சப்-இன்ஸ்பெக்டர் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தார்.

''ஹலோ குட்லக் நர்சிங்ஹோம்...?''

''எஸ்...''

''டாக்டர் ரகுநாத்தோடு பேசணும்.''

''ஹோல்டிங்...''

''டாக்டர்! ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ்... ஒரு என்கொயரி பி-5 போலீஸ் ஸ்டேஷனலிருந்து சப்-இன்ஸ்பெக்டர் கனகராஜ் பேசறேன்...''

''என்ன விஷயம்...?''

''உங்க ஹாஸ்பிடல்ல வடிவுக்கரசின்னு ஒரு பொண்ணு பிரசவத்துக்காக அட்மிட் ஆயிருக்

காளா...?''

''ஆ... ஆமா...''

''அவ ஒரு ரிக்ஷாக்காரனோட மனைவி. அந்த ரிக்ஷாக்காரன் பேரு மாரியப்பன்.''

''ஆ... ஆமா...''

''இப்ப அவன் அங்கே இருக்கானா...?''

''இ... இல்லையே...! எதுக்காக அவனைப்பத்தி கேக்கறீங்க?''

''மூணு மணி நேரத்துக்கு முன்னாடி ஒரு கேஸ் விஷயமா அவனைப் பிடிச்சு... ஸ்டேஷனுக்கு கொண்டு வந்தோம்... லாக்கப்புல இருந்தவன் ஒரு மணி நேரத்துக்கு முந்தி தப்பிச்சுட்டான். அவனை விசாரிச்சிட்டிருக்கும்போது- ரெண்டு மூணு தடவை உங்க ஹாஸ்பிடல் பேரைச் சொல்லி என் பெண்டாட்டியை அங்கே அட்மிட் பண்ணியிருந்தேன்னு சொன்னான். அது உண்மையா... பொய்யான்னு தெரிஞ்சுக்கத்தான் போன் பண்ணினேன்...''

ரகுநாத் தன் அதிர்ச்சியையும் நடுக்கத்தையும் காட்டிக் கொள்ளாமல் இயல்பாய் பேசினார். ''அவன் சொன்னது உண்மைதான். ஆனா எதிர்பாராத விதமா ஒரு சம்பவம் இங்கே நடந்துப் போச்சு... அந்த ரிக்ஷாக்காரனோட பெண்டாட்டி அரை மணி நேரத்துக்கு முந்திதான் ஃபிட்ஸ் வந்து இறந்துட்டா...! அந்தப் பொண்ணுக்கு வேண்டிய 'பங்காரு'ன்னு ஒருத்தன் இங்கே வந்திருந்தான். அவன் கிட்டே விஷயத்தை சொல்லி விட்டிருக்கோம்...''

''பாடியை வாங்கிப்போக இன்னும் யாரும் வரலையா டாக்டர்?''

''வரலை...''

''பாடியை வாங்கறதுக்காக மாரியப்பன் உங்க ஹாஸ்பிடலுக்கு வந்தா உடனடியா... அவனை ஒரு ரூம்ல அடைச்சு வெச்சுட்டு போலீஸுக்கு தகவல் கொடுங்க டாக்டர்...''

''சரி...''

சப்-இன்ஸ்பெக்டர் கனகராஜ் ரிஸீவரை வைத்து

விட்டு - இன்ஸ்பெக்டரை ஏறிட்டார். "ஸார்! அந்த மாரியப்பன் ஹார்ம்லெஸ்ன்னு நினைக்கிறேன். வெள்ளிங்கிரியோட ஆட்களுக்கும் அவனுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. ஹாஸ்பிடல்ல டெலிவரிக் காக அட்மிட் ஆகியிருந்த மாரியப்பனோட ஒய்ஃப் பிட்ஸ் வந்து இறந்து போயிருக்கா... நாம அவனைக் கொஞ்சம் நிதானமா என்கொயர் பண்ணியிருக்க லாம்..."

இன்ஸ்பெக்டர் அலட்சியமாய் தோள்களை குலுக்கினார். "அவன் திருடாமே இருந்திருக்கலாம்... ஆனா லாக்கப்பிலிருந்து தப்பிச்சிட்டு போனது தப்பு தானே? அதுக்காகவாவது அவனை பிடிச்சு கொண் டாரணும்.... ரெண்டு மாசமாவது உள்ளே தள்ள ணும்..."

● ○ ●

# 16

**வி**டியற்காலை ஐந்தரை மணி.

விவேக் ஜாக்கிங் ஷீட்டை தரித்துக்கொண்டு -ஷெல்ப்பில் எதையோ தேடியபடி இருந்தான். போர்வைக்குள் இருந்தபடி ரூபலா கேட்டாள்.

"இன்னும் கிளம்பாமே என்ன பண்ணிட்டிருக் கீங்க...?"

"நேத்திக்கு ஹாஸ்பிடல்ல... ரிடையர்ட் டி.எஸ்.பி ராமலிங்கத்தை பார்க்கப் போனப்ப அவர் என்கிட்ட என்ன கேட்டார்...?"

"ஹாஸ்பிடல்ல.. பொழுது போகலை... படிக்கி றதுக்கு நாலைஞ்சு புஸ்தகம் வேணும்ன்னு கேட் டார்... முக்கியமா 'ஸ்காட் க்ரைம்ஸ்' கேட்டார்..."

''அதைத்தான் தேடிட்டிருக்கேன்...''

''இப்பவே கொண்டுபோய் கொடுக்கப் போறீங்களா...?''

''ஜாக்கிங் க்ரௌண்டுக்கு... அந்த ஹாஸ்பிடல் வழியாத்தானே போயாகணும். அப்படியே அவரைப் பார்த்து குடுத்துட்டா ஒரு வேலை முடிஞ்சது...''

''ஸ்காட் 'க்ரைம்ஸ்' புக் ஷெல்ப்போட மூணாவது தட்டுல இருக்கும் பாருங்க... போனவாரம் நான் எடுத்து... அதை படிச்சிட்டிருந்தேன்.''

''சொல்லாதே... புல்லரிக்குது... நீயாவது... படிக்கிறதாவது... கரப்பான் பூச்சியை அடிக்கிறதுக்காக அதை எடுத்திருப்பே...''

''சரியா கண்டுபிடிச்சுட்டீங்களே...?''

''உன்னைப் பத்தி எனக்கு தெரியாதா... என்ன...? நீ யாரு... உன்னோட குலம் கோத்திரம் என்ன...? நீ எதுக்காக ஒரு பொருளைத் தொடுவே...? இதெல்லாம் புரியாமலா... உன்கூட குடும்பம் நடத்திட்டிருக்கேன்...''

''சரி... சரி... புத்தகம் கிடைச்சுதா...?''

''கிடைச்சுது...''

''கிளம்புங்க...''

''வந்து கதவை தாழ் போட்டுக்க...''

விவேக் புத்தகங்களோடு வெளியே வந்தான். விடிகாலையின் இருட்டு லேசாய் சாயம் போயிருக்க - தெருவிளக்குகள் இன்னமும் எரிந்து கொண்டிருந்தன. 'கிட்''டில் புத்தகங்களைப் போட்டுவிட்டு -பைக்கை உதைத்து கிளப்பினான்.

போக்குவரத்தற்ற ரோட்டில் பத்தே நிமிஷப் பயணம்.

குட்லக் ஹாஸ்பிடல் - இளம் சூரியனின் மெலிதான ஆரஞ்சு வர்ணத்தில் - பெய்கிற பனியில் நனைந்தபடி வந்தது.

ஹாஸ்பிடலின் பிரதான கேட் சாத்தப்பட்டிருக்க

- விக்கெட் கதவுக்கு முன்பாய் ஸ்டூலில் உட்கார்ந்த படி அந்த வாட்ச்மேன் தெரிந்தான். எழுந்து நின்று பைக்கை மறித்தான்.

"யாரை ஸார் பார்க்கணும்...?"

"ஒரு பேஷண்ட்டை..."

"விஸிட்டர்ஸ் ஹவர்ஸ் பத்து மணியிலிருந்து தான் ஸார்..."

விவேக் தான் ஒரு போலீஸ் ஆபீஸர் என்பதை அவனுக்கு உணர்த்த - வாட்ச்மேன் கையெடுத்து கும்பிட்டான்.

"மன்னிச்சுக்குங்க ஸார்... பத்து மணிக்கு முன்னாடி யாராயிருந்தாலும் ஹாஸ்பிடலுக்குள்ளே விடக்கூடாதுங்கறது டாக்டரோட ஆர்டர்... நீங்க அவசியம் உள்ளே போகணும்ன்னா... டாக்டர் கிட்டே அனுமதி வாங்கணும்... அதோ... அந்த க்வார்ட்டர்ஸில் தான் அவர் இருக்கார்... போய் ஒரு வார்த்தை கேட்டுட்டு வந்துட்டா பரவாயில்லை ஸார். டாக்டரோட அனுமதி இல்லாமே... உங்களை உள்ளே அனுப்பினா... என்னோட வேலை போயிடும் ஸார்..."

விவேக் புன்னகைத்தான். சற்றுத் தூரத்தில் தெரிந்த க்வார்ட்டர்ஸை பார்த்தபடியே கேட்டான்.

"டாக்டர் இந்நேரத்துக்கு எந்திரிச்சிருப்பாரா?"

"அவர் அஞ்சு மணிக்கே எந்திரிச்சு... பின்பக்கம் இருக்கிற தோட்டத்துல நடந்திட்டிருப்பார் ஸார்..."

விவேக் பைக்கைத் திருப்பினான்.

அடர்த்தியான மரங்களுக்கு மத்தியில் - அந்த பங்களாத்தனமான க்வார்ட்டர்ஸ் உட்கார்ந்திருக்க -கேட் திறந்திருந்தது.

பைக்கை உள்ளே நுழைத்து - பறவைகள் கீச்சிட்டுக் கொண்டிருந்த ஒரு மரத்துக்கு கீழே நிறுத்திவிட்டு - போர்டிகோ படியேறி வாசல் கதவை நெருங்கினான்.

கொஞ்சமாய் - கதவு திறந்திருந்தது.

தலையை உள்ளே நுழைத்து எட்டிப்

பார்த்தான்.

ஹால் அரையிருட்டாய் தெரிய - சுவர் கடிகாரம் டிக்கிக் கொண்டிருந்தது. ஹாலில் யாராவது தென்படு கிறார்களா என்று - பார்வையை நகர்த்திய விவேக் -

சட்டென்று திடுக்கிட்டான்.

மாடிப்படியருகே -

யாரோ குப்புற விழுந்திருந்தார்கள்.

விவேக் ஓடிப்போய் - அந்த உருவத்தை நெருங்கி - குனிந்து மண்டியிட்டு புரட்டினான்.

டாக்டர் ரகுநாத் ரத்தமாய் மல்லாந்தார்.



# 17

வித்யப்ரகாஷ், சுபலா விக்கித்துப் போய் நின்றிருக்க - டாக்டர் ரகுநாத்தின் உடலை போஸ்ட் மார்ட்டத்துக்கு - அனுப்பும் முயற்சியில் போலீஸ் இயங்கிக் கொண்டிருந்தது.

விவேக் சுபலாவை நெருங்கினான்.

''மிஸ் சுபலா...''

கர்ச்சீப்பால் வாயைப் பொத்தி கலங்கிய கண்க ளோடு - துணியால் சுற்றப்பட்டிருந்த ரகுநாத்தின் உடலையே பார்த்துக் கொண்டிருந்த சுபலா நிமிர்ந் தாள். அவசர அவசரமாய் கண்களை துடைத்துக் கொண்டாள்.

''எஸ்...''

''டாக்டர் ரகுநாத்தும் நீங்களும் ராத்திரி ஒரு மணி வரைக்கும் ஹாஸ்பிடலில் இருந்ததாய்... ட்யூட்டி

நர்ஸ்கள் சொல்லியிருக்காங்க... உண்மையா...?''

''உண்மைதான்.''

''எதுக்காக அவ்வளவு நேரம் இருந்தீங்க...?''

''டெலிவரிக்காக அட்மிட் பண்ணியிருந்த வடிவுக்கரசிங்கிற பெண் ஃபிட்ஸ் வந்து இறந்து போயிட்டா... அவ பாடியை வாங்கிட்டு போறதுக்காக...பனிரெண்டு மணிக்கு மேல்தான் ஆட்கள் வந்தாங்க. அவங்ககிட்டே ஒப்படைச்சுட்டு... நானும் அவரும் ஹாஸ்பிடலிலிருந்து திரும்பும்போது ஒரு மணி...''

''உங்க வீடு எங்கேயிருக்கு....?''

''இங்கிருந்து ஒரு கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிற கௌரி காலனியில்...''

''நீங்க ஹவுஸ்சர்ஜன் இல்லையா...?''

''ஆமா...''

''டாக்டர் ரகுநாத்... விடியற்காலை நாலு மணியிலிருந்து அஞ்சு மணிக்குள்ள சுடப்பட்டிருக்கணும்ங்கிறது... ஃபாரன்ஸிக் ரிப்போர்ட்... இந்த கொலைக்கு காரணம் யாராயிருப்பாங்கன்னு நீங்க நினைக்கறீங்க...?''

''எனக்கு தெரியலை ஸார். அங்கிள் ரொம்பவும் நல்லவர். யார்க்கும் எந்த தீங்கையும் நினைக்காதவர். அவருக்கு ஒரு எதிரி இருப்பான்னு என்னால நம்பமுடியலை...''

வித்யப்ரகாஷ் விவேக்கிடம் குறுக்கிட்டார்.

''என்னோட சந்தேகத்தை நான் சொல்லலாமா...?''

''ப்ளீஸ்...''

''மாரியப்பன் என்கிற ரிக்ஷாக்காரன்தான் இந்த படுகொலையை பண்ணியிருக்கணும்... அவனோட மனைவி பிரசவத்துக்காக அட்மிட் பண்ணப்பட்டிருந்தவ... திடீர்ன்னு ஃபிட்ஸ் வந்து இறந்துட்டா... மனைவி இறந்ததுக்கு காரணம் டாக்டர் ரகுநாத் தான்னு அந்த ரிக்ஷாக்காரன் நினைச்சிருக்கலாம்...''

விவேக் நிமிர்ந்தான்.

"மாரியப்பன்... தன் மனைவி இறந்ததும் டாக்டர் கிட்டே சண்டை போட்டு... ரகளை பண்ணினானா...?"

"அந்தப்பெண் இறந்தபோது அவன் ஆஸ்பத்திரியில் இல்லை. போலீஸ் அவனை திருட்டு கேஸுக்காக ஸ்டேஷனுக்கு அழைத்துப் போயிருந்தார்கள். ஆனால் ஸ்டேஷனிலிருந்து அவன் தப்பிவிட்டான். அப்படி தப்பியவனுக்கு - தன் மனைவி இறந்த விஷயம் எப்படியோ தெரிந்திருக்க வேண்டும். மனைவியின் இறப்புக்கு காரணம் டாக்டர்ங்கிற முடிவில் இந்தக் கொலையைப் பண்ணியிருக்கலாம்..."

"அந்தப் பொண்ணோட பிணத்தை வாங்கிட்டு போக மாரியப்பன் வரலையா...?"

சுபலா சொன்னாள்.

"வரலை..."

"வேற யார் வந்து பாடியை வாங்கிட்டு போனாங்க..."

"பங்காருன்னு ஒருத்தன் அந்தப் பொண்ணோட நெருங்கின சொந்தக்காரர்களை ராத்திரி பனிரெண்டு மணிக்கு மேல கூட்டிட்டு வந்து... பாடியை வாங்கிட்டு போனான்."

"மாரியப்பன் எங்கேன்னு நீங்க கேக்கலையா?"

"கேட்டோம்... அவனைப் பத்தின தகவல் தெரியலைன்னு சொல்லிட்டாங்க... பாடியை ஹாஸ்பிடலில் ரொம்ப நேரம் வெச்சிருக்க பிரியப்படாத டாக்டர் அவங்க வந்து கேட்டதும் உடனே பாடியை எடுத்துட்டு போகும்படி சொல்லிட்டார்..."

"மாரியப்பனோட வீட்டு அட்ரஸ் என்ன...?"

"ஹாஸ்பிடல் லெட்ஜர்ல இருக்கு..."

● ○ ●

# 18

தாரை தம்பட்டை சத்தம் கேட்டுக் கொண்டிருந்த - மாரியப்பனின் வீட்டுக்கு கொஞ்சம் தள்ளியே யமஹா பைக்கை நிறுத்தினான் விவேக்.

துக்கம் விசாரிக்க வந்தவர்கள் திண்ணையின் மேல் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருக்க - அவர்களில் ஒருவனை நெருங்கினான் விவேக்.

"இங்கே பங்காருங்கிறது யாரு...?"

அவன் நிமிர்ந்து பார்த்துவிட்டு சட்டென்று சொன்னான். "அதோ முண்டாசு கட்டிகிட்டு ஒருத்தர் நிக்கறாரே அவர்தான்..."

விவேக் பங்காருவை நெருங்கி அவனுடைய தோளைத் தொட்டான். அவன் திரும்பிப் பார்க்க -சொன்னான்.

"நான் போலீஸ்... உன்கிட்ட கொஞ்சம் பேசணும்."

பங்காரு தன் தலையில் இருந்த முண்டாசை அவிழ்த்து கையில் வைத்துக் கொண்டான். "மாரியப்பனை பத்திதானே கேக்கப் போறீங்க?"

"ஆமா..."

"அய்யா! நேத்து ராத்திரி அவன் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தப்பிச்சதும் நேரா என் வீட்டுக்குத்தான் வந்தான். தூங்கிகிட்டிருந்த என்னை எழுப்பி - தான் போலீஸ்ல மாட்டிக்கிட்ட விபரத்தையும், ஆஸ்பத்திரியில் வடிவுக்கரசி இருக்கிறதைப் பத்தியும் சொன்னான். ஆஸ்பத்திரிக்கு போய் வடிவுக்கரசியை பார்த்து - தன்னோட இக்கட்டான நிலைமையைப் பத்தி சொல்லும்படியாவும் சொன்னான். நானும் ஆஸ்பத்திரிக்குப் போனேன். வடிவுக்கரசியை ஆப

ரேஷன் தியேட்டர்க்கு கொண்டு போயிருக்கிறதா ஒரு நர்ஸம்மா சொன்னாங்க. நான் காத்திட்டிருந் தேன். அரை மணி நேரத்துக்கப்புறம்... டாக்டர் வந்து... வடிவுக்கரசி இறந்துட்டதா சொன்னாரு. நான் பதறிப் போயிட்டேன்... உடம்பெல்லாம் வெடவெ டன்னு ஆயிட்டது... சொந்தக்காரங்களை கூட்டிட்டு வர்றதா சொல்லிட்டு...நேரா என் வீட்ல தங்கியிருந்த மாரியப்பன் கிட்டே வந்தேன். விஷயத்தை சொன் னேன். அவன் ஆடிப்போயிட்டான். கொஞ்ச நேரத் துக்கு எதுவும் பேச முடியாமே தேம்பி தேம்பி சின் னக் குழந்தை மாதிரி அழுதான்... அப்புறம் என் னோட கைய்யி ரெண்டையும் பிடிச்சுக்கிட்டு... பங் காரு! ஆஸ்பத்திரிக்கு என்னால வர முடியாது. நீயே நம்ம சொந்தக்காரங்களை கூட்டிக்கிட்டு போய் - வடி வோட உடம்பை என் வீட்டுக்கு கொண்டு வந்து ருன்னு சொன்னான். அவன் சொன்ன மாதிரியே சொந்தக்காரங்களை கூட்டிக்கிட்டு போய் - வடி வோட பொணத்தை ஆஸ்பத்திரியிலிருந்து வாங் கிட்டு வந்தேன். பொணத்தை அவன் வீட்ல கிடத் திட்டு என் வீட்டுக்கு வந்து பார்த்தேன். மாரியப் பனை காணோம்... எங்கே போனான்னு தெரி யலை...''

''போலீஸ்ல மறுபடியும் மாட்டிக்கிட்டானா...?''

''இல்லீங்களே... கொஞ்ச நேரத்துக்கு முந்தி... உடுப்பு போட்ட ஒரு சப்-இன்ஸ்பெக்டர் வந்து விசா ரிச்சுட்டு போனாரே...?''

''பங்காரு...''

''அய்யா...!''

''வடிவுக்கரசி... செத்துப்போன விஷயத்தை மாரியப்பன் கிட்டே நீ சொன்னதும்... அவன் ஆத்தி ரப்பட்டு... டாக்டர்ஸை ஏதாவது பேசினானா...?''

''நல்ல ஆஸ்பத்திரின்னு நினைச்சி... என்னோட வடிவை கொண்டு போய் சேர்ந்தேன். டாக்டர் ஏமாத் திட்டாரேன்னு சொல்லி - தலைத்தலையா அடிச்சுக் கிட்டு அழுதான்... அவ்வளவு தான்... மத்தபடி ஏதும்

கோபமா பேசலை...''

''மாரியப்பன் இப்ப எங்கே போயிருப்பான்னு நீ நினைக்கிறே?''

''தெரியல்லீங்கய்யா... பொண்டாட்டியை பார்க்க வந்தா போலீஸ் பிடிச்சுக்கிட்டு போயிடுவாங் களோங்கிற பயத்துல... அவன் தலைமறைவாயிருக் கலாம்...''

பங்காரு சொல்லிக் கொண்டிருக்கும்போதே -

. போலீஸ் ஜீப் ஒன்று - புழுதி பறக்க வந்து - வீட்டு முன் பிரேக்கிட்டு நின்றது. அதிலிருந்து இறங் கிய இன்ஸ்பெக்டர் ஒருவர் விவேக்கைப் பார்த்துக் கொண்டே வேகமாய் வந்து - சல்யூட் செய்தார்.

''ஸார்...!''

''எஸ்...''

''மாரியப்பனைப் பற்றி ஒரு தகவல்...''

''என்ன...?''

''ப்ளீஸ் கம் வித் மீ... ஸார்...''

விவேக் அந்த இன்ஸ்பெக்டரைத் தொடர்ந்தான்.



---

# 19

---

ஜீப் அந்த கருவேலங்காட்டின் முகப்பில் நிற்க - ஜீப்பை பின் தொடர்ந்து வந்த விவேக்கும் தன் யமஹாவை நிறுத்தினான். இறங்கி ஸ்டாண்ட் இட் டான்.

ஜீப்பினின்றும் இறங்கிய இன்ஸ்பெக்டர் -விவேக்கை வழி நடத்தி அந்த கருவேலங்காட்டுக் குள் கூட்டிப்போனார்.

இருபதடி தூரம் போனதும் - காவலுக்கு நின்ற அந்த இரண்டு கான்ஸ்டபிள்களும் சல்யூட் செய்து விலக - அந்த உடம்பு மரத்தினின்றும் தொங்கிக் கொண்டிருந்தது.

இன்ஸ்பெக்டர் சொன்னார். "இவன்தான் மாரி யப்பன் ஸார்..."

சலனமில்லாமல் தொங்கிக் கொண்டிருந்த மாரி யப்பனின் உடலைப் பார்த்துக் கொண்டே விவேக் கேட்டான்.

"இவனோட சர்ட் பாக்கெட்டில் இருந்து - ஒரு லெட்டரை எடுத்ததா சொன்னீங்களே... அந்த லெட் டர் எங்கே...?"

இன்ஸ்பெக்டர் பக்கத்திலிருந்த கான்ஸ்டபிள்க ளைப் பார்க்க - அவர் தன் சட்டை பாக்கெட்டில் வைத்திருந்த - சற்றே பழுப்பு ஏறிய - நான்கால் மடிக் கப்பட்ட ஒரு காகிதத்தை நீட்டினார். விவேக் அதை வாங்கிப் பிரித்தான்.

மொக்கை பென்சிலால் கோணல்மாணலாய் எழுதப்பட்ட அந்த கடிதத்தின் வரிகள் எழுத்துப் பிழைகளோடு இருந்தன.

போலீஸ் சமூகத்துக்கு

ரிக்ஷாக்கார மாரியப்பன் எழுதிக் கொண்டது. அய்யா... எந்தக் குற்றமும் பண்ணாத என்னைய ஸ்டேஷனுக்கு பிடிச்சுட்டு போனீங்க... இப்ப என் பெண்டாட்டி செத்துட்டா... என் வடிவுக்கரசியை பொணக் கோலத்துல பாக்க நான் விரும்பலை. அதான் கருவேல மரத்துல தொங்கிட்டேன்... என் னோட சாவுக்கு யாரும் காரணமில்ல. இப்படிக்கு -மாரியப்பன்.

விவேக் அந்த லெட்டரை படித்துவிட்டு நிமிர்ந் தான்.

"பாடியை மொதல்ல பார்த்தது யாரு...?"

"மாடு மேய்க்கிற பையன் ஒருத்தன் பார்த்துட்டு வந்து பஞ்சாயத்து பிரஸிடெண்ட் கிட்டே சொல்லியி ருக்கான்... அவர் போன் பண்ணி தகவல் கொடுத்

தார்...''

''பாடியை ஸ்பாட் எக்ஸாமின் பண்ணீங்களா...?''

''டாக்டரைக் கூட்டிட்டு வந்து பண்ணினேன் ஸார்... தற்கொலைதான்னு சொல்லிட்டார். ஒரு மணியிலிருந்து ரெண்டு மணிக்குள்ளே மாரியப்பன் தூக்கு போட்டுகிட்டு இறந்திருக்கணும்ன்னு டாக்டர் சொன்னார்...''

விவேக் பெருமூச்சோடு - கருவேல மரத்தின் ஒரு வலுவான கிளையிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த மாரியப்பனைப் பார்த்தான்.

இருதயம் கனத்துப் போயிற்று.



# 20

சுபலா தன் வீட்டு பின்பக்கக் கதவைத் திறந்து கொண்டு - தோட்டப் பகுதிக்கு ஒரு சின்ன கடப்பாறையோடு - இருட்டில் நடந்தாள். ராத்திரி மணி பத்து. வானத்தில் நட்சத்திர வெளிச்சம் மட்டும் மிச்சம் இருந்தது.

சுபலா இலைச்சருகுகளை மிதித்துக் கொண்டு -அந்த நெல்லிமரத்துக்கு கீழே வந்து நின்றாள். சுற்றும் முற்றும் ஒரு தடவை பார்த்துக்கொண்டு கீழே குனிந்து உட்கார்ந்து - பூமியைத் தடவிப் பார்த்து விட்டு - கையிலிருந்த கடப்பாறையால் கொத்த ஆரம்பித்தாள்.

''சக்... சக்...''

மண் மேலே வந்தது.

குழியை ஆழப்படுத்தியவள் - பின் கைகளால் மணலை பறித்து - உள்ளே புதையுண்ட அந்த ரிவால் வரை வெளியே எடுத்தாள். பின் மெதுவாய் எழுந்து நின்று - மணலைக் காலால் தள்ளி குழியை மூடிவிட்டு - இடது கையில் கடப்பாறையோடும்... வலதுகையில் ரிவால்வரோடும் - மெல்ல நடந்து பின்பக்கம் கதவுக்கு வந்தாள்.

திடுக்கிட்டாள்.

இருட்டில் சுவர்க்கு சாய்ந்தபடி-

வித்யப்ரகாஷ் நின்றிருப்பது தெரிந்தது.



# 21

அதே விநாடிகளில் -

விவேக்கை ரூபலா திட்டிக் கொண்டிருந்தாள். "ரிடையர்ட் டி.எஸ்.பி.க்கு புஸ்தகம் கொடுக்கப் போய் - ஒரு கேஸை வாங்கிட்டு வந்துட்டீங்களே! டிபார்ட்மெண்ட்ல நேரிடையா தர்ற கேஸ்கள் போதாதுன்னு... தீபாவளி போனஸ் மாதிரி இப்படியும் சிலகேஸ்கள்."

"என்ன செய்யறது...? என் ராசி அப்படி. எனக்கு பெண்டாட்டியா வாய்ச்ச உன்னோட ராசியும் அப்படி..."

"என்னைப் பொறுத்தவரைக்கும் இந்தக்கேஸ் ரொம்ப சுலபங்க."

"எப்படிச் சொல்றே...?"

"பத்து வருஷமா குழந்தை உண்டாகமே இருந்து... அப்புறம் உண்டாகி தன்னோட பெண்

டாட்டி ஒரு குழந்தையை பெத்துக் குடுக்கப் போறான்னு ஆசை ஆசையா இருந்த ரிக்ஷாக்கார மாரியப்பனுக்கு - பெண்டாட்டி இறந்து போனதை ஜீரணிக்க முடியலை... டாக்டர் மேல நிச்சயமா ஆத்திரம் ஆத்திரமா வந்திருக்கும்... கொன்னுட்டான்...''

''மக்கு...''

''ஏன்... நான் சொன்னது தப்பா...?''

''ஒரு ரிக்ஷாக்காரனுக்கு ரிவால்வரை ஹேண்டில் பண்ணத் தெரியுமா?''

''ஏன் அவன் ஒரு கிரிமினலா இருந்திருக்கக் கூடாதா...?''

''மாரியப்பனை பத்தி நான் தரோவா விசாரிச்சுட்டேன். அவன் ஒரு அப்பாவி. நியாய அநியாயத்துக்கு பயந்தவன்... பெண்டாட்டி செத்துப் போயிட்டான்னு தெரிஞ்சதுமே இடிஞ்சு போய்... தூக்குல தொங்கிட்டான். அவன் தூக்கு போட்டுக்கிட்டது ராத்திரி ஒரு மணியிலிருந்து ரெண்டு மணிக்குள்ளே. ரகுநாத் சுடப்பட்டு இறந்தது விடிகாலை நாலு மணியிலிருந்து அஞ்சு மணிக்குள்ளே.''

தூக்கத்தில் சிணுங்கிய பாரத்தை தட்டிக் கொடுத்தபடியே ரூபலா கேட்டாள். ''அப்படின்னா டாக்டர் ரகுநாத்தோட கொலைக்கு யார் காரணம்...?''

''ரகுநாத் ஒரு ஒண்டிக்கட்டை. குடும்பம் கிடையாது. ராத்திரி நேரத்துல வேலைக்காரங்க யாரும் இருக்கமாட்டாங்க... அவர் சுடப்பட்டு இறந்து போயிருக்கிறது அவரோட சொந்த லைசென்ஸ் பிஸ்டல்ல...''

ரூபலா நிமிர்ந்தாள்.

''என்னது...? அவரோட சொந்த பிஸ்டல்ல சுடப்பட்டிருக்காரா...?''

''ஆமா... அவரோட லைசென்ஸ் பிஸ்டல் இண்டர் மாக்னம் பாயிண்ட் ஃபைவை சேர்ந்த ஜாதி... கொலையாளி வீட்டுக்கு வந்து - அவரோட பிஸ்டலையே யூஸ் பண்ணி நிதானமா... சுட்டு கொன்னுட்டு அந்த பிஸ்டலையும் எடுத்துகிட்டு... கிளம்பி

யிருக்கான்..."

"எப்படி கண்டுபிடிச்சீங்க...?"

"ரகுநாத் உடம்புல பாய்ஞ்சிருக்கிற தோட்டாவை வெச்சும்... டாக்டர் சுபலா கொடுத்த ஸ்டேட்மெண்ட்படியும்..."

"டாக்டர் சுபலாவோட ஸ்டேட்மெண்ட் என்ன...?"

"டாக்டர் ரகுநாத்துக்கு எதிரிகள் யாருமில்லாத போதிலும் கடந்த ஆறுமாசமாவே ஒரு லைசென்ஸ்ட் பிஸ்டல் வெச்சிருந்தார். நான் எதுக்குன்னு கேட்டேன். அவர் சிரிச்சுக்கிட்டே... நான் ஒண்டிக்கட்டை திடீர்ன்னு முகமூடி கொள்ளைக்காரங்க... வீட்டுக்குள்ளே பூந்துட்டா என்ன பண்றது... அதுக்காகத்தான்னு சொன்னாரு... இன்னிக்கு அதே பிஸ்டல் அவர்க்கு எமனாயிடுச்சு... - இது சுபலாவோட ஸ்டேட்மெண்ட்..."

"ரகுநாத் வீட்ல அந்த பிஸ்டல் இப்ப இல்லை..."

"சல்லடை போட்டு தேடிட்டோம். இல்லை..."

"சரி... டாக்டர் கொலை விஷயமா உங்க சந்தேக வட்டத்துக்குள்ளே யார் யார் வர்றாங்க...?"

"கண்ணுக்கெட்டின தூரம் வரைக்கும் யாரும் இல்லை... உடனே யாரையும் சந்தேகப்படவும் முடியலை. கேஸ் அயோத்தியா பிரச்னை மாதிரி குழப்பமா இருக்கு..."

"அந்த வித்யப்ரகாஷ் யாருன்னு சொன்னீங்க?"

"ஒரு சயன்டிஸ்ட்... ரகுநாத்துக்கு ஃப்ரெண்ட். கெஸ்ட்டா வந்து தங்கியிருக்கார். ரகுநாத்தோட மரணத்துல ரொம்பவும் இடிஞ்சு போனது அவர்தான்..."

"அவரைக்காட்டிலும் இடிஞ்சு போன ஒருத்தர் இருக்கார்..."

"யாரு...?"

"நீங்கதான்..."

# 22

ஒரு கையில் ரிவால்வரோடும் - இன்னொரு கையில் கடப்பாறையோடும் தன்னைப் பார்த்து திடுக்கிட்டுப் போன சுபலாவை புன்னகையோடு ஏறிட்டார் வித்யப்ரகாஷ்.

''என்னம்மா... இது... தோட்டத்துல செடி நட்டவங்களைப் பார்த்திருக்கேன். துப்பாக்கி நட்டவங்களை நான் இன்னிக்குத்தான் பார்க்கறேன்...''

''ஸ... ஸார்... இ... இது வந்து... வந்து...?'' சுபலா பேச்சு வராமல் திணற - வித்யப்ரகாஷ் அவளை நெருங்கி - அவளுடைய கையிலிருந்த துப்பாக்கியை வாங்கினார்.

''இ... இது...டாக்டர் ரகுநாத்தோட துப்பாக்கி மாதிரி தெரியுதே...! ஏன்னா ரெண்டு நாளைக்கு முன்னாடி இந்த துப்பாக்கியை அவர் வீட்ல பார்த்தேன். அவர்தான் எடுத்துக் காட்டினார்...''

''ஸ... ஸார்...''

''என்னோட எம்ப்ரியோ ப்ரீச்சர் எக்ஸ்பரிமெண்ட்டை மறுபடியும் எப்ப வெச்சுக்கலாம்ன்னு உன்னை கன்சல்ட் பண்றதுக்காக வந்தேன்... நான் காம்பௌண்ட் கேட்டுக்குள்ளே நுழையும்போதே -நீ ரூல்ஸ் ருமிலிருந்து - கடப்பாறை எடுத்துட்டுப் போறதை 'நோட்' பண்ணினேன். இந்த நேரத்துக்கு - கடப்பாறை எதுக்கு...? யோசிச்சேன். மனசுக்கு கொஞ்சம் நெருடலா பட்டது. சத்தம் இல்லாமே உன்னை ஃபாலோ பண்ணி வந்து இந்த இருட்டுல நின்னுகிட்டேன்...''

''ஸ... ஸார் நான்... வந்து...''

''உள்ளே போய் - சோபாவில உட்கார்ந்துகிட்டு வசதியா பேசலாமா...''

சுபலா மௌனமாய் உள்ளே போக - அவர் தொடர்ந்தார்.

இருவரும் ஹால் சோபாவுக்கு வந்து - எதிரெதிரே மௌனமாய் உட்கார்ந்தார்கள். அரை நிமிஷ மௌனத்திற்கு பிறகு வித்யப்ரகாஷ் கேட்டார்.

''இ... இப்ப சொல்லு...''

''ஸ... ஸார்... நான்... வந்து...''

''டாக்டர் ரகுநாத்தை அவர் துப்பாக்கியிலேயே சுட்டுக்கொன்னுட்டு... அதையும் கையோட கொண்டு வந்துட்டே... போலீஸ் கண்டுபிடிச்சுடக் கூடாதேங்கிறதுக்காக - தோட்டத்துல புதைச்சு வெச்சே... மறுபடியும் மனசுக்குள்ளே பயம்... இந்த பிஸ்டலை வேற பக்கம் எங்கேயாவது கொண்டு போய் - டிஸ்போஸ் பண்ணிடலாம்ன்னு நினைச்சு... புதைச்சதை மறுபடியும் தோண்டி எடுத்தே! நான் சொல்றது சரியா...?''

சரிதான் என்பது போல் மௌனமாய் இருந்தாள் சுபலா. வித்யப்ரகாஷ் தொடர்ந்தார். ''சொல்லு... 'அங்கிள் அங்கிள்'ன்னு பாசமா கூப்பிட்டுகிட்டு இருந்த நீ... எதுக்காக அவரை கொலை செய்யணும்...?''

சுபலா நடுக்கமாய் நிமிர்ந்தாள். ''அவர் எங்கப்பாவுக்கு செஞ்ச துரோகத்துக்குத்தான் துப்பாக்கி குண்டை பரிசா கொடுத்தேன்.''

''துரோகமா...?''

''எஸ்... எங்கப்பாவும் ரகுநாத்தும் கூட்லக் ஹாஸ்பிடலுக்கு பார்ட்னர்ஸ்ங்கிறது உங்களுக்குத் தெரியும். ஹாஸ்பிடல் லட்சக்கணக்கான பணத்தை சம்பாதிச்சு கொடுத்தது. ரகுநாத் திருட்டுக் கணக்கு எழுதி எங்கப்பாவை ஏமாத்த ஆரம்பிச்சார். அப்பா அதையெல்லாம் கண்டும் காணாத மாதிரி இருந்தார். சில சமயம் என்கிட்டே சொல்லி வருத்தப்படுவார்.

ஒருநாள் அப்பா ஹாஸ்பிடல்ல இருக்கும்போது -ஹார்ட் அட்டாக்கினால் திடீர்ன்னு பாதிக்கப்பட்டார். பக்கத்தில் இருந்த ரகுநாத் அப்பாவுக்கு எந்த ட்ரீட்மெண்ட்டையும் செய்யாமே சாகவிட்டார்.''

''அப்படீன்னா... உங்கப்பாவோட சாவுக்கு டாக்டர் ரகுநாத்தான் காரணமா...?''

''ஆமா...''

''இந்த வன்மத்தை மனசுல வெச்சுக்கிட்டுதான்... அவரை 'அங்கிள்' 'அங்கிள்'ன்னு கூப்பிட்டுகிட்டே... பழகிவந்தேன். சமய சந்தர்ப்பம் வாய்க்கும்போது அவரைத் தீர்த்துக் கட்டவும் தயாராயிருந்தேன். நேத்திக்கு ராத்திரி தான் அந்த வாய்ப்பு எனக்கு கிடைச்சுது... ரிக்ஷாக்காரனோட பெண்டாட்டி வடிவுக்கரசி உங்க எக்ஸ்பரிமெண்டாலே செத்துப் போனதும் என் மனசுக்குள்ள சின்னதா ஒரு யோசனை. இந்த சமயத்தில் ரகுநாத்தை தீர்த்துக் கட்டினா போலீஸோட சந்தேகம் ரிக்ஷாக்காரன் பக்கமா திரும்பும். நாம தப்பிச்சுக்கலாம்ன்னு நினைச்சேன். விடிகாலை நாலு மணிக்கு டாக்டர் வீட்டுக்குப் போனேன். காலிங்பெல் கொடுத்தேன். கதவைத் திறந்தார். என்ன விஷயம்ன்னு கேட்டார். வீட்ல தனியா இருக்க பயமாயிருந்ததுன்னு சொல்லி அங்கேயே அரைமணி நேரம் தங்கி - அவர் பாதுகாப்புக்காக வெச்சிருந்த துப்பாக்கியை எடுத்து சுட்டுட்டு வீட்டுக்கு வந்துட்டேன். துப்பாக்கியை என்ன பண்றதுன்னு எனக்குத் தெரியலை. அவசரத்துக்கு தோட்டத்துல புதைச்சு வச்சேன். புதைச்சு வெச்சாலும் மனசு கேக்கலை. போலீஸ் சந்தேகப்பட்டு திடீர்ன்னு வந்து வீட்டை சோதனை போட்டா என்ன பண்றதுன்னு உதறலாயிருந்தது. அதான் அதை தோண்டி எடுத்து ப்ளஷ் அவுட் ஸிங்குக்குள்ளே போட்டுலாம்ன்னு..''

வித்யப்ரகாஷ் புன்னகைத்தார்.

''இந்த 'பிஸ்டலைப் பத்தி இனிமே நீ கவலைப்படாதே சுபலா. இதை பத்திரமா டிஸ்போஸ் பண்ணனாச்சு...''

''தேங்க்யூ.. ஸார்...''

''இதோ பார் சுபலா... என்னோட 'எம்ப்ரியோ ரீச்சர்' எக்ஸ்பரிமெண்ட்டுக்கு டாக்டர் ரகுநாத் ஆத பு கொடுக்க தயங்கினபோது... நீ எனக்கு ஆதரவா ட்சினே... அதனால ரகுநாத் ஒத்துக்கிட்டார். எக்ஸ்ப ரிமெண்ட் எதிர்பாராதவிதமாய் தோல்வியைத் தழுவி அந்தப் பெண் இறந்துப் போனது ஒரு துரதிர்ஷ்டம் ன். இனிமே அந்த துரதிர்ஷ்டம் நிகழாது.''

''ஸார்... என்ன சொல்றீங்க...?''

''எஸ்... 'எம்ப்ரியோ ப்ரீச்சர்' கம்ப்யூட்டர்ல றைஞ்சு போயிருந்த ஒரு தப்பை கண்டுபிடிச்சு சரி ண்ணிட்டேன்... இன்னொரு ப்ரக்னென்ட் படியை வெச்சு... அதே சோதனையை பண் ணா... கண்டிப்பா சக்சஸ்புல்லா அமையும்.''

''ஸ... ஸார்...''

''அந்த லேடி யார்ங்கிறதையும் முடிவு பண்ணிட் டன்.''

''யா... யார்... ஸார்...?''

''பிரசவத்துக்காக வந்து அட்மிட் ஆயிருக்கிற ாப்னா...''

''ஸ... ஸார்...''

''என்ன சுபலா ஷாக் ஆயிட்டே...?''

''ஸார்! இந்த 'எம்ப்ரியோ ப்ரீச்சர்' எக்ஸ்பரி ண்ட் இனியும் வேணுமா...?''

''ஏன்...? முதல் கேஸ் பெயிலியரான மாதிரி இது ஆயிடும்ன்னு நினைக்கறியா...? கண்டிப்பா காது... அந்த சொப்னாவை வெச்சு எக்ஸ்பரி ண்டை நடத்தத்தான் போறேன்... அதுக்கு நீ வி பண்ணனும்ன்னு கேட்டுக்கத்தான் இந்த நேரத் உன் வீட்டுக்கு வந்தேன்...''

''ஸ... ஸார்...''

''என்ன சொல்லு...''

''இந்த எக்ஸ்பரிமெண்ட்டை கொஞ்ச நாள் ச்சு வெச்சுகிட்டா என்ன...?''

"ஏன்... உனக்கு பயமா இருக்கா...? இதோ ப
சுபலா! ரெண்டாவதா செய்யப்போகிற இந்த எக்ஸ்
ரிமெண்ட் பெயிலியர் ஆனா... நான் மறுநாளே டெ
லிக்கு புறப்பட்டு போயிடறேன்... அதுக்கப்பு
இந்த எக்ஸ்பரிமெண்ட்டை நான் கண்டினியூ ப
ண்மாட்டேன்..."

"ஸார்..."

"பயப்படாதே சுபலா நானிருக்கேன்... உன
எந்த பிரச்சனையும் வராமே நான் பார்த்துக்கிறே
என்னோட எக்ஸ்பரிமெண்ட்டுக்காக நீ செ
னாவை மட்டும் தயார் பண்ணினா போதும்..."

வித்யப்ரகாஷ் எழுந்து கொண்டார்.

"ஸார்... இந்த ரிவால்வர்...?"

"கவலைப்படாதே... நான் டிஸ்போஸ் பண்
டறேன்."

"எப்படி..."

"உன் வீட்டுக்கு வர்ற வழியில் - ரோட்டுக்
நடுவில் ஒரு பாதாள சாக்கடை மேன்ஹோல் மே
மூடி திறந்து கிடந்ததைப் பார்த்தேன். இப்ப போகு
போது அதுல போட்டுடப் போறேன்... நான் வ
டுமா..."

● ○ ●

# 23

மறுநாள் இரவு ஒன்பதரை மணி!

சமையலறையினின்றும் எட்டிப் பார்த்த ரூப
ஆச்சர்யப்பட்டாள். "எங்கே கிளம்பிட்டீங்க...?"

கண்ணாடி முன் நின்று பேண்ட்டுக்குள் சர்ட்ட

ழைத்துக் கொண்டிருந்த விவேக் திரும்பினான்.

"ஹாஸ்பிடலுக்கு..."

"எதுக்கு...?"

"லீவ்ல போயிருந்த ரெண்டு நர்ஸ்கள் இன் க்கு ட்யூட்டிக்கு திரும்பறாங்க... அந்த ரெண்டு பர்க்கும்... டாக்டர் ரகுநாத்தைப் பற்றி - ஆழமான ப விஷயங்கள் தெரியுமாம்..."

"அப்படீன்னு யார் சொன்னது...?"

"ஹாஸ்பிடல்ல ரிசப்ஷனிஸ்ட்டா இருக்கிற ஒரு பண் தான்..."

"போய்ட்டு எப்ப வருவீங்க...?"

"ஒரு மணி நேரத்துக்குள்ளே வந்துடுவேன்..."

"கடந்த ரெண்டுநாளா ஹாஸ்பிடலுக்கு போய் ன்கொய்ரி பண்ணிட்டு இருக்கீங்களே... என் னாட ஃப்ரண்ட் சொப்னாவைப் பார்த்தீங்களா?"

"அந்த டெலிவரி கேஸ் தானே...?"

"ஆமா..."

"பார்க்கலை..."

விவேக் வெளியே வந்து - ரூபலாவுக்கு கைய சத்துவிட்டு பைக்கை கிளப்பினான். ராத்திரி நேர பாக்குவரத்து அற்ற சாலையில் -

வேகமான - சில நிமிஷப் பயணம்.

ஹாஸ்பிடல் வந்தது.

பார்க்கிங்கில் - பைக்கை நிறுத்திவிட்டு உள்ளே பானான். ரிசப்ஷன் கௌண்டரில் உட்கார்ந்திருந்த பண் எழுந்து நின்றாள்.

"என்னம்மா... அந்த ரெண்டு நர்ஸும் வந்துட் ாங்களா?"

"இன்னும் வரலை ஸார்... வர்ற நேரம் தான்... 'முக்கமா ஒன்பதரை மணிக்கெல்லாம் வந்துடு ாங்க... இன்னிக்கு இன்னமும் காணோம்..."

"டாக்டர் சுபலா வந்துட்டாங்களா?"

"உள்ளே இருக்காங்க ஸார்..."

"பேஷண்ட்டை அட்டெண்ட் பண்ணி
இருக்காங்களா?"

"இல்ல ஸார்... மிஸ்டர் வித்யப்ரகாஷே
பேசிட்டிருக்காங்க."

"எந்த ரூம்...?"

"அதோ...!"

விவேக் போனான். அறைக்கு முன்பாய் நின்
பாதி திறந்திருந்த கதவை மெல்லத் தட்டினான்.

"டொக்... டொக்..."

"ப்ளீஸ் கம் இன்..."

சுபலாவின் குரல் கேட்டது.

கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனா
விவேக். சுபலாவும் வித்யப்ரகாஷும் எதிரெதிர் ந
காலிகளில் உட்கார்ந்து தெரிந்தார்கள்.

"ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ்..."

"நோ ப்ராப்ளம்... ப்ளீஸ் கம்..."

விவேக் வித்யப்ரகாஷுக்கு பக்கத்தில் இரு
நாற்காலிக்கு வந்து உடம்பைக் கொடுத்தான். சொ
ன்னான். "லீவில் போயிருந்த அந்த ரெண்டு நர்ஸ்கள
இன்னிக்கு நைட் ட்யூட்டிக்கு வரப்போறதா தகவ
அதான் வந்தேன்..."

"என்கொய்ரியா...?"

"எஸ்..."

"கேஸ்ல ஏதாவது ப்ராக்ரஸ் இருக்கா...?"

"எதுவுமே பிடிபடலை... ரகுநாத் கொலை செ
யப்பட்றதுக்கு மோட்டீவ் என்னான்னு தெரிஞ்சா
தான்... கொலையாளி யார்ங்கிறதை கண்டுபிடி
முடியும்."

வித்யப்ரகாஷ் குறுக்கிட்டு சொன்னார். "ரகுந
ஒரு திறமையான் டாக்டர்ங்கிறதைக் காட்டிலும்
ஒரு நல்ல மனிதர். அந்த மனிதர்க்கு இப்படியொ
கோர மரணம் நிகழ்ந்திருக்க வேண்டாம்..."

"டொக்... டொக்..."

கதவு மறுபடியும் தட்டப்பட்டது.

"எஸ்... கம்... இன்..." சுபலா குரல் கொடுக்க - அந்த நர்ஸ் உள்ளே வந்தாள்.

"என்ன லீலா...?"

"நீங்க கூப்பிட்டதா... ரிசப்ஷன்ல சொன்னாங்க. நான் லேபர் வார்டுல இருந்தேன். இண்டர் காம்ல தகவல் வந்தது... உடனே புறப்பட்டு வர்றேன்..."

"எஸ்... எஸ்... நான்தான் வரச்சொன்னேன்... ரூம் நெம்பர் ஃபோர்ட்டினில் இருக்கிற பெண்ணுக்கு பேபி "டிஸ்லொகேட்' ஆயிருக்கு... இன்னும் ரெண்டு மணி நேரத்துக்குள்ளே அந்த பெண்ணுக்கு 'சிஸேரியன் ஆப்ரேஷன்' பண்ணியாகணும்...! அவளோட கணவர் ரூம்ல இருக்கார் இல்லையா...?"

"ஆமா டாக்டர்..."

"அவர்கிட்டே இந்த பிரிஸ்க்ரிப்ஷனைக் குடுத்து இதில் எழுதியிருக்கிற மெடிசன்களை வாங்கிட்டு வரச் சொல்லு..."

"எஸ்... டாக்டர்..."

நர்ஸ் லீலா அந்த ப்ரிஸ்க்ரிப்ஷனை வாங்கிக் கொண்டு வெளியே போனாள். அவள் போனதும் விவேக் சுபலாவிடம் நிமிர்ந்தான்.

"ரகுநாத்தைப் பற்றி ஒரு கேள்வி"

"எஸ்..."

"அவர் ஏன் கல்யாணம் பண்ணிக்கலை...?"

"நானும் பல தடவை அவர்கிட்டே இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கேன். அவர் சரியா பதில் சொல்லாமே மழுப்பிடுவாரு..."

"அப்படீன்னா... உங்களுக்கு காரணம் எதுவும் தெரியாது?"

"தெரியாது..."

மேஜை மேலிருந்த இண்டர்காம் சிணுங்கியது. சுபலா ரிஸீவர எடுத்து பேசிவிட்டு - விவேக்கை ஏறிட்டாள்.

"நீங்க என்கொயரி பண்ண வந்த - அந்த ரெண்டு நர்ஸூம் வந்தாச்சு. ட்யூட்டி ரூம்ல இருக்காங்க ளாம்..."

விவேக் எழுந்தான். "ஓ... கே... டாக்டர்... நான் அந்த ரெண்டு நர்ஸையும் என்கொயரி பண்ணிட்டு கிளம்பறேன். ரகுநாத் மர்டர் சம்பந்தமா ஏதாவது 'க்ளூ' கிடைச்சா உங்களை 'காண்டாக்ட்' பண் றேன்..."

விவேக் விடைபெற்றுக் கொண்டு - வெளியே வந்து ட்யூட்டி ரூமை நோக்கிப் போனான்.

ட்யூட்டி ரூமில் - அந்த இரண்டு பெண்களும் காத்திருந்தார்கள். விவேக் அவர்களைப் பார்த்ததுமே

"செல்வராணி, மல்லிகா...?"

"நாங்கதான்... ஸார்..."

"டாக்டர் ரகுநாத் கொலையானது சம்பந்தமாய் உங்களை விசாரிக்க வந்திருக்கிற க்ரைம் ப்ராஞ்ச் போலீஸ் ஆபீஸர் நான்..."

"ரிசப்ஷன்ல சொன்னாங்க ஸார்..."

"டாக்டர் ரகுநாத்கிட்டே ரொம்பகாலமா நீங்க ரெண்டு பேரும் இருந்திருக்கீங்க இல்லையா...?"

"ஆமா... ஸார்..."

"அவரை யார்... எதுக்காக கொன்னிருப்பாங் கன்னு... உங்களாலே அனுமானம் பண்ண முடி யுதா...?"

"ஸார்... எங்களுக்கு இந்த நியூஸ் பெரிய ஷாக்... ஒரு தோழியோட கல்யாணத்துக்காக எர்ணாகுளம் போயிருந்த நாங்க... பேப்பரைப் பார்த்துதான் டாக்ட ரோட கொலையைப்பத்தி தெரிஞ்சுகிட்டோம்... அவர் எதுக்காக கொலை செய்யப்படனும்ன்னு எங் களுக்கு புரியலை ஸார்... டாக்டர் மாதிரி ஒரு குட் பர்ஸனை பார்க்கவே முடியாது..."

விவேக் அவர்களிடம் ஒரு பதினைந்து நிமிஷ நே ரம் விதவிதமாய் பேசிப்பார்த்தான். அவர்கள் சொன்ன பதில்களில் ஏதும் பிடிபடாமல் போகவே -இருதயம் நிறைய ஏமாற்றத்தை சுமந்துகொண்டு

-ட்யூட்டி ரூமைவிட்டு வெளியே வந்து - பார்க்கிங் கில் நின்றிருந்த தன் பைக்கை நோக்கி நடக்கத் துவங்கி னான்.

● ○ ●

# 24

பத்து மணி.

சொப்னாவின் அறைக்குள் நுழைந்தாள் சுபலா. அவளுடைய கணவன் ப்ரிஸ்கிரிப்ஷன் சீட்டோடு -உட்கார்ந்து இருப்பதைப் பார்த்ததும் லேசான கோபத்தோடு கேட்டாள்.

''மருந்து வாங்க... இன்னுமா நீங்க கிளம்ப லை...?''

''இதோ கிளம்பிட்டே... இருக்கேன் டாக்டர்...''

''அதுல எழுதியிருக்கிற எல்லா மருந்துகளும் அவசியம் வேணும். அந்த மருந்துகள் கிடைக்கிறதும் கஷ்டம்... ஒவ்வொரு பார்மஸியா அலைஞ்சு பார்த் துதான் வாங்கிட்டு வரணும்... எதையும் வாங்காமே வந்துடாதீங்க...''

''இல்ல டாக்டர்... எப்படியும் வாங்கிட்டு வந்து டறேன். பை... த பை...''

''சொல்லுங்க...''

''ஆப்ரேஷன் க்ரிடிகலா... இருக்காதே...?''

''நோ... நோ... சிஸேரியன்ங்கிறது... டான்சில் ஆப்ரேன் மாதிரி ஆயிடுச்சு... நீங்க பயப்பட வேண் டியதே இல்லை... மருந்து மட்டும் முக்கியம்...''

சொப்னாவின் கணவன் கிளம்பினான்.

அவன் தலை மறைந்ததும் -

சுபலா தன் கையில் வைத்திருந்த மெடிக்கல் கிட்டைத் திறந்து அந்த ஸெடக்டீவ் இஞ்செக்ஷனை எடுத்தாள்.

சொப்னா வயிற்றைப் பிடித்துக்கொண்டு - மிரட்சியாய் அவளைப் பார்த்தபடி சொன்னாள். "டாக்டர்! ப்யம்மாயிருக்கு...?"

"எதுக்கு பயம்...?"

"டாக்டர் ரகுநாத் இருந்தவரைக்கும் எனக்கு நார்மல் டெலிவரிதான்னு சொல்லிட்டிருந்தார்... ஆனா இன்னிக்கு திடீர்ன்னு வந்து என்னை டெஸ்ட் பண்ணிப் பார்த்துட்டு 'பேபி டிஸ்லொகேட் ஆயிருக்குன்னு சொன்னதும் ஆடிப்போயிட்டேன்..."

"பயப்படாதே.. பேபியை... சிஸேரியன் மூலமா எடுக்கிறதுதான் பெய்ன்லெஸ் டெலிவரி..."

சுபலா சொல்லிக்கொண்டே சொப்னாவின் தோள் பட்டைஙயப் பிடித்து இஞ்செகஷனைப் போட்டாள்.

● ○ ●

---

# 25

---

ஹாஸ்பிடலுக்கு பின்புறம் இருந்த கெஸ்ட் ஹவுஸில் இண்டர்காம் கூப்பிட்டதும் போனுக்கு பக்கத்தில் காத்திருந்த வித்யப்ரகாஷ் ரிஸீவரை எடுத்தார்.

சுபலா பேசினாள்.

"ஸார்! நீங்க ஆபரேஷன் தியேட்டருக்கு வரலாம்"

"சொப்னாவை கொண்டு வந்தாச்சா...?"

"ஆச்சு..."

"ஸெடக்டிவ்...?"

"போட்டாச்சு..."

"இப்ப வந்துட்றேன்..."

ரிஸீவரை வைத்துவிட்டு - வித்யப்ரகாஷ் எழுந்தார். பீரோவைத் திறந்து - பாலியூர்தீன் உறைக்குள் இருந்த எம்ப்ரியோ ப்ரீச்சரை எடுத்துக் கொண்டு வெளியே வந்தார்.

ஆஸ்பத்திரியின் எல்லா ஜன்னல்களும் இருட்டில் இருக்க - ஆப்ரேஷன் தியேட்டர் இருந்த மாடியில் மட்டும் வெளிச்சம் தெரிந்தது.

நடந்தார்.

● ○ ●

# 26

ஆபரேஷன் தியேட்டர்.

சொப்னா மரக்கட்டையாய் மல்லாந்து கிடக்க -அங்கே இருந்த ஸ்டூல் ஒன்றில் தலையைப் பற்றிய படி உட்கார்ந்திருந்தாள் சுபலா. வித்யப்ரகாஷ் 'எம்ப்ரியோ பிரிச்சர்' கம்ப்யூட்டரை சொப்னாவின் தலை மாட்டில் வைத்து எக்ஸ்பரிமெண்ட்டுக்கான ஆயுத்த நிலைகளை கவனித்துக் கொண்டிருந்தார்.

"ஸார்..." சுபலா நடுக்கமாய் கூப்பிட்டாள்.

"ம்..."

"உங்க எக்ஸ்பரிமெண்ட்டை இரண்டுமணி நேரத்துக்குள்ளே முடிச்சுக்கணும்..."

"ஓ...கே... ஓ...கே..."

''ஸ... ஸார்...!''

''சொல்லு...''

''வடிவுக்கரசி மாதிரி இவளும் செத்துடமாட்டாளே...?''

''நிச்சயமா சாகமாட்டா. ஏன்னா... நான்தான் கம்ப்யூட்டர்ல இருந்த தப்பை சரிபண்ணிட்டேனே...''

''ஸார்... சொப்னா சாகக்கூடாது... அப்படி செத்தா... ஆஸ்பத்திரி பேர் வெளியே கெட்டுடும்...''

வித்யப்ரகாஷ் சிரித்தார். ''என்னது ஹாஸ்பிடல் பேர் கெட்டுடுமா..? தப்பும்மா... ரொம்ப... தப்பு! ஒரு ஹாஸ்பிடல்ல பேஷண்ட்கள் மரணமடையறது இயற்கை. ஆனா ஒரு டாக்டரை டாக்டரே... கொலை பண்ணிட்டார்ன்னு வெளியே தெரிஞ்சாத்தான் பேர் கெடும்...''

''ஸார்... அதைப்பத்தி பேசாதீங்க...!''

''ஏம்மா பயப்படறே...? ரகுநாத்தை நீதான் கொலை செஞ்சிருப்பேன்னு யாரும் நினைச்சுக்கூட பார்க்கமாட்டாங்க... 'அங்கிள் அங்கிள்'ன்னு சொல்லிகிட்டே... காரியத்தை அழகா முடிச்சிருக்கே... உன்னோட சாமர்த்தியத்தை ஒவ்வொரு நிமிஷமும் நினைச்சு ஆச்சரியப்பட்டுகிட்டு இருக்கேன் தெரியுமா...?''

''ஸார் உங்க வேலையை நீங்க மொதல்ல முடிங்க... இது முடிஞ்சதும் - சொப்னாவுக்கு நான் சிசேரியன் ஆப்ரேஷன் பண்ணி குழந்தையை வெளியே எடுக்கணும். நர்சுகளை ரெண்டுமணி நேரம் கழிச்சு ஆப்ரேஷன் தியேட்டர்க்கு வரச்சொல்லியிருக்கேன்...''

''நோ ப்ராப்ளம்... அதுக்குள்ளே என்னோட எக்ஸ்பரிமெண்ட் முடிஞ்சுடும்...

ரெண்டுமணி நேர எக்ஸ்பரிமெண்டில் குழந்தை சாகலைன்னா அதுவே எனக்கு பெரிய வெற்றி...! என்னம்மா உட்கார்ந்துட்டே... வந்து கொஞ்சம்

ஹெல்ப் பண்ணு. சொப்னாவோட ட்ரஸ்ஸை ரிமூவ் பண்ணி - இந்த மேக்னடிக் ஒயரை வயித்துக்கு சுத்து. அதுக்குள்ளே நான் மானிட்டர் ஸ்கீரினை சரி பார்த்து டறேன்...''

சுபலா எழுந்து கொண்டிருக்கும் போதே -

தியேட்டரின் வெபின் அல்மய்ரா-வின் மறைவுப் பகுதியிலிருந்து அந்தக் குரல் கேட்டது.

''உங்க எக்ஸ்பரிமெண்ட்டுக்கு நானும் உதவி செய்யலாமா மிஸ்டர் வித்யப்ரகாஷ்...?''

திடுக்கிட்டு திரும்பினார்கள் இருவரும்.

விவேக் மறைவிலிருந்து வெளிப்பட்டான்.



# 27

வித்யப்ரகாஷின் கையிலிருந்த - மேக்னடிக் ஒயர்ச் சுருள் அவர் கையினின்றும் தன்னிச்சையாய் உதிர்ந்து கீழே விழ - விவேக் அவரை நெருங்கினான்.

''தடங்கலுக்கா வருந்துகிறேன்...''

''நீ... நீங்க... இ... இங்கே...?''

புன்னகைத்தான் விவேக். ''வந்து அரைமணி நேரமாச்சு. எப்படி வந்தேன்னு கேக்கறீங்களா...''

இருவரும் உறைந்துபோய் விவேக்கையே பார்க்க அவன் தொடர்ந்தான். ''இந்தக் கேஸை கண்டு பிடிக்கிறதுக்காக ரொம்பவும் கஷ்டப்பட வேண்டியிருக்கும்ன்னு நினைச்சேன்... அந்த ஏமாற்றத்தோடு தான்... ரெண்டு நர்ஸ்கள் கிட்டேயும் என்கொய்ரி பண்ணிட்டு - எந்த பிடியும் கிடைக்காமே... ஹாஸ்பிடலை விட்டு வெளியே போயிட்டிருந்தேன். அந்த

சமயத்துலதான் நர்ஸ் லீலா... இன்னொரு நர்ஸ் கிட்டே பேசிட்டே வராந்தாவில போய்கிட்டிருந் தாங்க. ''டாக்டரம்மாவுக்கு என்னாச்சுன்னு தெரி யலை... பிரிஸ்க்கிரிப்ஷன்ல எழுதியிருக்கிற மூணு மருந்தும்... வெளியில கிடைக்காத மருந்து. விடிய விடிய அந்த சொப்னாவோட புருஷன் சுத்தினாலும் எந்த பார்மஸியிலும் கிடைக்கப் போறதில்லை. இதெல்லாம் டாக்டரம்மாவுக்கு தெரியும். தெரிஞ்சி ருந்தும் ஏன் எழுதி குடுத்தாங்கன்னு தெரியலை. அதைவிட இன்னொரு ஆச்சரியமான விஷயம்... அந்த ப்ரிஸ்கிரிப்ஷனில் எழுதியிருக்கிற மூணு மருந் தும் நம்ம மெடிகல் ஸெல்லிலேயே இருக்கு... அதுவு மில்லாமே சொப்னாவுக்கு நார்மல் டெலிவரிதான்னு டெரிய டாக்டர் சொல்லிட்டிருந்தார். இந்தம்மா என் னடான்னா... பேபி டிஸ்லொகேட் ஆயிருக்கு... சிஸேரியன் பண்ணனும்ன்னு சொல்றாங்க... அது வும் அவசரம் அவசரமா... ஆப்ரேஷனை பண்ணனு மாம்... அந்த ரிக்ஷாக்காரன் பொண்டாட்டியையும் இப்படித்தான்... திடீர்ன்னு தியேட்டர்க்கு கொண்டு போய்... சாகடிச்சாங்க...''

நர்ஸ் லீலா இப்படி பேசிகிட்டு போனதும் - என் மனசுக்குள்ளே ஒரு பட்டிமண்டபம். சொப்னாவுக்கு சிஸேரியன் ஆப்ரேஷன் செய்யப்படுவது டாக்டர் சுபலாவின் உண்மையான கடமையினாலா...? அல் லது வேறு யாராவது காரணத்தினாலா...? பட்டிமண் டப. முடிவை தெரிஞ்சுக்க வேண்டாமா...? நர்ஸ் லீலாவை தனியா மடக்கினேன். என்னோட சந்தே கத்தை சொன்னேன்... சுபலா சொப்னாவை ஆப்ரே ஷன் தியேட்டர்க்கு கொண்டுட்டு வர்றதுக்கு முந் தியே நான் இங்கே வந்துட்டேன். 'வெபின் அல்மய் ரா'-வுக்கு பின்னாடி அரைமணி நேரமா மூச்சு காட் டாமே நின்னுட்டிருந்தேன்... நீங்க ரெண்டுபேரும் கடந்த அரைமணி நேரமா எவ்வளவு தடவை தும்மி னீங்க... எவ்வளது தடவை இருமினீங்க... என் னென்ன பேசிகிட்டீங்க... எல்லாமே என் காதுக் குள்ளே போயாச்சு... இருந்தாலும் தலைப்புச் செய்தி களை மட்டும் பேசிட்டு... ரெண்டு பேருமே கம்ன்னு இருந்துட்டீங்க... எனக்கு விலாவாரியா விபரம்

வேணும்... விபரத்தை இங்கே வெச்சு சொல்லவேண் டாம். ஸ்டேஷனுக்கு போயிருவோம்..."

சொல்லிக்கொண்டே - வித்யப்ரகாஷின் மேல் கையை வைத்தான் விவேக்... அவர் தலைகுனிந்து வெளியேற - சுபலாவும் தொடர்ந்தாள்.

தியேட்டரை விட்டு வெளியே வந்து - அந்த இருட்டான வராந்தாவில் நிசப்தமாய் நடந்தார்கள்.

எதிர்பட்டாள் நர்ஸ் லீலா.

விவேக் நின்றான்.

"சிஸ்டர்..."

"ஸார்..."

"சொப்னாவை ரூமுக்கு கொண்டு போயி ருங்க... இன்னும் கொஞ்ச நேரத்துல வேற ஒரு டாக் டர் குழு இங்கே வந்து பேஷண்ட்டுகளை பார்த்துக்க ஏற்பாடு பண்றேன்"

"தாங்க்யூ ஸார்..."

"நீங்க எனக்கு தாங்க்ஸ் சொல்லாதீங்க சிஸ்டர். நான்தான் உங்களுக்கு கோடிகோடியா தாங்க்ஸ் சொல்லணும்..."

(முற்றும்)

